Vol. X 1932—1933




The South India Saiva Siddhanta Works
Publishing Society, Tinnevelly, Ltd.,
Tinnevelly & Madras.

 [Price Rs. 3-8.

## 'செந்தமிழ்ச் செல்வி' இதழாசிரியர்

## கூட்டத்து உறுப்பினர்கள்

### (Editorial Board Members)

# உள்ளுறை

[* இக்குறியிடப்பட்டவைகள் இத் தொகுதியில் முடிவு பெறாது தொடர்வன.]

## படங்கள்

# செந்தமிழ்ச் செல்வி

## பைண்டுத் தொகுதிகள்

இதுகாறும் வெளிவந்த பத்து ஆண்டு செல்வித் தொகுதிகள் அழகியனவாய்க் கட்டிடஞ் செய்யப்பட்டிருக்கின்றன.

இதன்கண் அரும்பெருந் தமிழ்ப்புலவர்களால் எழுதப்பட்ட தமிழ் இலக்கணம், இலக்கியம், மொழியாராய்ச்சி, சைவசமயம், திருமுறை, பிறசமயங்கள், புராணம், இதிகாசம், நுண்ணூல் (Science) களின் சாரம், வியப்பு மொழிகள் (Wits & Humours) உவகை மொழிகள், சீர்திருத்த அறிவுரைகள், அறவுரைகள் முதலியன வெளிவந்திருக்கின்றன. தமிழ்க் கல்வி விரும்புவோர் இத்தொகுதிகளை ஒரு முறை கற்பின் சிறந்த புலமை எய்துவர் என்பது திண்ணம்.

### நூல் நிலையங்கட்கு இன்றியமையாது வேண்டப்படுவனவாகும்

| | | | |
|---|---|---|---|
| 1 முதல் 4, 9 & 10 தொகுதிகள் தனித்தனி விலை ரூ | 3 | 8 | 0 |
| 5 முதல் 8 ,, | 4 | 8 | 0 |
| 10 தொகுதிகளும் | 34 | 0 | 0 |
| கையொப்ப நண்பர்களுக்கு | 31 | 0 | 0 |

தகுந்த கழிவு கொடுக்கப்படும்.



ஸ்ரீவைகுண்டம் திருவாளர் S. T. பொன்னம்பலநாத
முதலியார் அவர்கள்

ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றுந்

திங்கள்தோறும் வெளிவருவது.

| | | |
|---|---|---|
| சிலம்பு ய | மெய்கண்டான் யாண்டு-எ௱கூ தைத் திங்கள் 1932ஞு ஜனவரிமூ—பிப்ரவரிமூ | பரல் க |

திருச்சிற்றம்பலம்.

## திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம்

தன்னிற் றன்னை யறியுந் தலைமகன்
தன்னிற் றன்னை யறியிற் றலைப்படும்
தன்னிற் றன்னை யறிகில னாயிடில்
தன்னிற் றன்னையுஞ் சார்தற் கரியனே.

பதவுரை:—

தன்னில் தன்னை=ஒருவன் தனது உடலில் விளங்குகின்ற உயிராகிய தன்னை

அறியில்=அறிந்தால்

தன்னில் தன்னை=தனது உடலில் விளங்குகிற

அறியுந் தலைமகன்=தனது உயிர் அறியும் பொருட்டு அதற்குக் காணு முதவியாகிய அறிதலை அவ்வுயிர் அறியாது செய்து வருகின்ற தலைவன்

வெளிப்படும்=(முன் மறைந்திருந்தது போல அல்லாமல் இப்பொழுது அவ்வுயிர் தன்னை உணரும்படி) விளங்கித் தோன்றுவன்

தன்னில் தன்னை அறிகிலனாயிடில்=அவ்வாறு அவன் தனது உடலில் விளங்குகிற உயிரை அறியாவிட்டால்

தன்னில் தன்னையும்=தனது உடலில் விளங்குகிற உயிரையும்

சார்தற்கு அரியன்=அத்தலைவன் இரண்டறக் கலந்து விளங்க மாட்டான்

விளக்க உரை:—

இத் தேவாரப் பாட்டு ஒருவன் தனது உயிரில் நிறைந்து அதற்கு உள்ளுயிராய் (over soul) இருக்கின்ற தலைவனாகிய இறைவனை உணர்ந்து அறிந்து அவனோடு இரண்டற (அத்துவிதமாய்)க் கலந்து பேரின்பம் அடைதல் வேண்டும் என்ற உண்மையைக் கூறுகின்றது. இந்த உண்மையை முன் இரண்டு அடிகளும் உடன்பாட்டிலும் பின் இரண்டு அடிகளும் எதிர்மறையிலும் உணர்த்துகின்றன. ஒருவன் இறைவனைத் தன்னுள்ளே தன் முயற்சியாலே கண்டு அவனைச் சார்ந்து பேரின்பம் அடைய வேண்டுமேயன்றிப் பிற உயிர்களையும் பிற பொருள்களையும் சார்ந்து பேரின்பம் அடைதல் முடியாது என்றும், உயிர்ச் சார்பும் பொருட் சார்பும் முழுவதும் விட்டு இறைவனைச் சார்ந்த பொழுதுதான் பேரின்பத்தை அவன் அடைதல் கூடும் என்றும் அது கூறுகின்றது. உடலில் உயிர் விளங்குதல் போல உயிரில் இறைவன் அதற்கு உள்ளுயிராய் அதன் அறிவுக்கு அறிவாய் விளங்குகின்றான். முதலாவது ஒருவன் தன்னை உடல் என்று நினையாது உயிர் என்று அறிதல் வேண்டும். அப்பொழுது அவனுக்குத் தத்துவ ஒழுக்கம் தோன்றி உடலே தான் என்ற உணர்ச்சி (Personality) நீங்கி உயிரே தான் என்கிற உணர்ச்சி (individuality or egoism) உண்டாகிறது. பின் உயிர் இறைவனிடத்தில் ஒடுங்கும் உயிர்ஒடுக்கம் தோன்றி, உயிரே தான் என்ற தன்முனைப்பு உணர்ச்சி நீங்கி இறைவனே தன்னின் மேலிட்டு நின்று தான் அவ்விறைவனுக்குள் அடங்கி நிற்கும் மெய்யுணர்வு (Spirituality) உண்டாகின்றது. இந்த மெய்யுணர்வு தோன்றுதலை இப்பாட்டுக் கூறுகின்றது. இக்கருத்தைத்தான் "சிவனொடுக்கம் பூத வொடுக்கந் தேறவுதிக்கும் பரஞானம்" என்று அருணகிரிநாதர் திருப்புகழில் கூறி அருளினர்.

இந்தப் பாட்டில் 'தன்னில்' 'தன்னை' என்ற சொற்றொடர்கள் நான்கு அடிகளிலும் வருதலால் இது சொற்பொருட் பின்வரு நிலையணி. நான்கு அடிகளிலும் முதலாவது வருகின்ற தன் என்ற சொல் உடலையும், இரண்டாவது வருகின்ற தன் என்ற சொல் உடலில் விளங்குகின்ற உயிரையும் குறிக்கின்றன.

தலைமகன்=தலைவன், இறைவன், ஆண்டான், கடவுள். "வானோர்

தம்மானைத் தலைமகனை" என்ற திருப்போரூர்த் திருத்தாண்டகம் முதலாவது பாட்டில் தலைமகன் என்ற சொல் இறைவனைக் குறித்தல் காண்க.

அறியுந் தலைமகன்=அடிமையாகிய உயிரினது அறிவுடன் கலந்து காணும் உதவியாகிய அறிதலைச் செய்து உயிர் அறியாது ஆண்டு வருகிற ஆண்டவன். ஆண்டவன் உயிருடன் கலந்து அறியாவிட்டால் உயிர் ஒன்றனையும் அறியாது. இக்கருத்தைத் திருமூலர் திருமந்திரம், அ-ம் தந்திரம், அடிதலை யறியுந் திறங்கூறல்—4 வது பாட்டில் "எந்தையு மென்னை யறியகில்லானுகில், எந்தையை யானு மறியகில்லேனே" என்று கூறி யருளினர்.

தலைப்படும்=விளங்கித் தோன்றும்.

இதே கருத்துடையதாய்த் திருமந்திரத்தில் அடியிற்கண்ட பாட்டு வருதல் காண்க.

தன்னினிற் றன்னை யறியுந் தலைமகன்
தன்னினிற் றன்னை யறியத் தலைப்படும்
தன்னினிற் றன்னைச் சார்கிலனுயிற்
றன்னினிற் றன்னையுஞ் சார்தற்கரியவே.

மா. வே. நெல்லையப்ப பிள்ளை

---

# சேவினந் தழுவல்

[திரு. அ. நடராஜ பிள்ளை]

நமது முன்னோர்கள் நஞ் செந்தமிழ் நாட்டினைக் குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் என ஐந்து பிரிவுகளாக வகுத்து, அவற்றினியல்புகளைப் பொருளிலக்கணத்திற் பெரிதும் விரித்துரைத்துள்ளார்கள். இதனையே மேனாட்டறிஞர்கள் நிலப் பரப்பு நூல் (Geography) எனக் கூறுகின்றனர். இக்காலத்தில் மேனாட்டாரால் வகுத்துக் கூறப்படும் நிலப்பரப்பு நூன் முறைக்குப் பொருளிலக்கணத்திற் கூறப்படும் முறை வேறுபட்டிருப்பினும், இவ்விரண்டிலுங் கூறப்படும் பொருள்களின் ஒற்றுமை கூர்ந்து நோக்குவார்க்குப் புலப்படாமற் போகாது.

முற்கூறிய ஐவகை நிலங்களுள், முல்லை நிலப்பரப்பின் தன்மையை யெடுத்துக் கொள்வோம். முல்லை நிலத்தை முதற் கண் வைத்து "மாயோன் மேயகாடுறை யுலகம்," எனக்கூறும் தொல்காப்பியர் கூற்றுன் நிலவுலகம், தட்ப வெப்பங்களால் மண்ணி னமைப்பு மாறுதலடையத் தொடங்கிய வக்காலத்தி லேயே காடுறை யுலகமாகிய முல்லை நிலமாக மாறிப் பின்னர், ஐவகையாகப் பிரிவுபட்டிருக்குமோவென ஐயுற வேண்டி யிருக் கின்றது. இவ் வையுறலினை, "முல்லையுங் குறிஞ்சியு முறை மையிற் றிரிந்து....பாலை யென்னும் படிவங் கொள்ளும்," என்ற சிலப்பதிகார வடிகள் மெய்யுறச் செய்கின்றன. கதிரவ னுடைய வெப்பத்தால் முல்லையி னொருசாரும், குறிஞ்சியி னொருசாரும் பாலை நிலமாம் பொழுது, தட்ப வெப்பங்களின் போக்கால் முல்லை நிலமே குறிஞ்சியாகவும், மருதமாகவும், நெய்தலாகவும் மாறுதற் கென்னே யையப்பாடு? நிலத்தின் முதன் மாறுபாடாகிய முல்லையானது, 'காடுறை யுலகம்', எனப் படுதலால் மரங்களடர்ந்த காடுகளும், அதனை யடுத்த புன்செய் நிலங்களும், ஆயர்பாடி இடைச்சேரி யென்ற வூர்களும் கூடிய நிலப்பகுதியே முல்லை நிலமென்பது பெறப்படுகின்றது.

காலத்தி னருமை யுணர்ந்த நம் பெரியோர்கள் மற்றைய நாட்டினரைப் போன்றே அதற்கு 'ஆண்டு', என்ற பெரும் பிரி வினையும், அவ்வாண்டினையே கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் எனப் பகுத்த ஆறு பகுதிகளையும், திங்கள் நாள் என்ற பாகுபாடுகளையும், மாலை, யாமம், வைகறை, காலை, நண்பகல் என்ற சிறு பொழுதுகளையும் ஏற்படுத்திக் கொண்டனர். இப்பாகுபாடுகள் யாவும் பொதுவாக முல்லை நிலத்திற்கு வேண்டப்படுவதாயினும், நிலம் வளம்படற் கின்றி யமையாத மழையினைக் கொட்டுங் கார்காலமும், இனிய பசும் புற் காட்சியோடு தென்றற் காற்றும், முல்லை நிலத்திற் சிறப் புறும் மாலை வேளையுஞ் சிறந்தன வென்பார், "காரும் மாலையும் முல்லை," என்று கூறினர். இந்நிலத்தார் வணங்குந் தெய்வந் திருமாலாகும். இதன்கண் வாழும் எளிய மக்கள் ஆயர்களாவர். மாயோனாகிய திருமாலையும், ஆயர்களையுங் கூட்டி நோக்குங்

கால் வட நாட்டின்கண் ஆயர்பாடியிற் சிறந்து விளங்கிய கண்ண பிரானை யெவருங் கருதாமலிரார். தென்னாட்டு முல்லை நில மக்கட்குத் தெய்வமாகிய மாயோன் வடநாட்டிலுள்ள முல்லை நிலமக்களின் நடுவே தோன்றிய மாயமென்னவோ அறிவுக்கெட் டாத வோராழ்ந்த பொருளா யிருக்கின்றது. இனி, முல்லை நிலமக்களின் தலைவர்கட்கு நாடன், தோன்றல் என்ற பெயர் கள் காணப்படுகின்றன. காடுகளில் ஒருநிலையின்றி வாழ்ந்த ஆயர்களை யொருநிலைப்படுத்தி, நாட்டு வாழ்க்கைக்கண் சிறந்து தோன்றச் செய்த அவர்கட்கு நாடன், தோன்றல் எனப் பெயர்கள் வாய்ப்பது மொழுங்கே யன்றோ? அங்ஙனமே இருக்க மனையின்றியும் வாழ விடமின்றியும் ஆயர்களோடு திரிந்த ஆய்ச்சியர்கட்கு வழிகாட்டியாக முன்வந்து மனை வாழ்க்கையினையும் புன்செய் நிலப்போக்கினையும் புலப்படுத்திய தலைவிமார்களுக்கு மனைவி, கிழத்தி யெனச் சிறப்புப் பெயர்கள் வழங்குவதும் பொருத்தமே யன்றோ? மேலும், இவர்களின் ஊர்களுக்குப் பாடி, சேரி என்ற பெயர்கள் வந்திருப்பதும், ஆயர்கள் முதலிற் பல விடங்களில் தங்கிப் பார்த்துப் பின்னோ ரிடத்திற் சேர்ந்து நிலைத்தனர் என்பதை வலியுறுத்தும். பாடி—தங்குமிடம்; சேரி—மக்கள் சேர்ந்து வசிக்குஞ் சிற்றூர்.

முல்லை நிலத்தில் வாழும் பறவைகள் பலவாயினும், 'காட் டுக் கோழி', என்பது அந்நிலத்திற் கின்றியமையாத புள்ளாம். இதுவே, அந்நில மக்களை வைகறை வேளையிற் கண் விழிக்கச் செய்து, பெருங் காடான முல்லை நிலத்தைப் புன்செய்களாக வும், நாடாகவும் மாற்ற நயம்புரிந்த வொன்றும். இங்கு வாழும் விலங்குகளில் அகப்பொருளாசிரியர்களால் இன்றியமை யாதனவாகக் கொள்ளப்பட்டன மான்களும், முயல்களுமாம். காடுகளை வெட்டிப் புன்செய்ப் பயிர்கள் விளைவிக்கத் தெரிவ தற்குமுன் மான்களும் முயல்களும் முல்லை நிலமக்கட்கு உண வுப் பொருள்களாயிருந்து, தமது அமைதித் தன்மையால் அம் மக்கட்கு இரக்க முண்டாக்கிப் புன்செய்த் தொழிலை யவர்கள் கைக்கொள்ளும்படிச் செய்தமையால், இவைகள் இந்நிலத்திற் கின்றியமையா விலங்குகளாயின போலும். இந்நிலத்தில் கான்

யாறு, குறுஞ்சுனை முதலிய இயற்கை நீர்நிலைகள் காணப்படுவ தான், இந்நில மக்கள் மழைவள மொன்றையே யெதிர் பார்த்த புன்செய் வேளாண்மையினை மட்டுங் கைக்கொண்டிருந்தனர் என்பது புலப்படுகின்றது. இது காடுறை யுலகமாதலான் இங்குப் பூக்கட்கும், மரங்கட்கும் எவ்விதக் குறையு மில்லை. இங் குள்ள புன்செய்களில் வரகு, சாமை, கொள்ளு, சோள முத லிய உணவுப் பொருள்கள் மிகுதியும் விளையும். இம்மக்கள் வைத்து வளர்க்கும் மூவினங் (எருமை, பசு, ஆடு)கட்கு, இப் புன்செய்ப் பயிர்களின் தாள்கள் தீனியாக மாறுந்திறனுங் கூர்ந்து நோக்கிக் கொள்ளத் தக்கதாம். இவர்கள் வேய்ங் குழ லிற் சாதாரி என்ற பண்ணினைப்பாடி மகிழ்வர். அப்பாடல் மூவின மேயத்தலுக்குத் துணையாய் நின்று மூவினங்களையு மொருங்கு கூட்டி மகிழ்விக்கு மாண்புடையதாம்.

எப்பகுதியி லுள்ளவர்களாயினும் மக்களாய்ப் பிறந்தோர்க் குத் தமது கடமைகள் செய்யப்பட்டு முடிந்த வளவில் உள்ளக் கிளர்ச்சி தோன்றலும், அது காரணமாக யாதாமொரு களியாட் டிற் புகுந்து கலந்து திளைத்தலு முண்டாம். அது போலவே, இம்முல்லை நிலமக்கட்கும் தமது கடமைகள் முடிந்த வளவில் வெளிப்படு முள்ளக்கிளர்ச்சி காரணமாகக் கொண்டாடுங் கொண்டாட்டங்கள் சிலவுள. அவை சேவினந்தழுவல், குரவையாடல், கான்யாறுடல் என்பனவாம். குரவையாடலி னியல்பினை நமது செல்வியின் ஒன்பதாந் தொகுதியில் வரைந் துள்ள, 'ஆய்ச்சியர் குரவை' என்ற கட்டுரையிற் காணலாம். கான்யாறுடல், கண்ணபிரான் யமுனை யாற்றில் ஆய்ச்சியர்க ளுடனுடிய கொண்டாட்டத்தால் நன்கு விளங்கும். சேவினந் தழுவல் யாதென்பதை யிக்கட்டுரையால் ஆராய்வோம்.

சேவினந் தழுவல் என்பது முல்லை நிலத்திற்குரிய எண் வகைக் கருப்பொருள்களு ளொன்றும். கருப்பொருள்களாவன ஒரு நிலத்தில் வாழும் மக்களின்வாழ்க்கைக் கின்றியமையாத பொருள்களின் கூட்டமாம். சேவினந்தழுவல், முல்லை நிலத் தலைவர்கட்கும், ஆயர்கட்கும் பொதுவாகிய வொரு கொண்

டாட்டமாகும். சேவினந்தழுவலாவது, முல்லை நில மக்கள் தமக்குப் பெண் மகவு பிறந்த காலத்தில், தம்மானிரைகளில் தோன்றிய சேங்கன்றுகளைக் கொழுக்க வளர விட்டு வைப்பார்கள். பின்னர், தம் பெண் மக்கள் மணப்பருவ முற்றவுடன் நாடெங்கும் பறை யறைவித்து, அம் மழவிளங் காளைகளைத் தழுவி யடக்க வல்லார் தம் பெண்களின் மணமக்களாவரெனத் தெரிவிப்பர். குறித்த நாளில் அவ்விளங் காளைகள் தொழுவிற் சேர்க்கப்பெறும். அவைகளிலொன்று மலையினின்று கீழ்நோக்கிவிழு மருவி போன்று, வெள்ளிய கால்களோடு கருமை நிறங்கொண்டு கண்டார் கலங்கும் வண்ணம் நிற்கும். மற்றொன்று, விண்மீன்கள் பொலிவு பெற்று விளங்குஞ் செவ்வானத்தை யொத்து வெண்புள்ளிகளைக் கொண்டு சிவந்து நிற்கும். இன்னொன்று, சிவபெருமான் செஞ்சடையிற் பிறை யிரண்டணிந்து நின்றாற்போல வளைந்த விரண்டு கொம்புகளைத் தலையிடத்தே தாங்கிச் சிவந்த மேனியினைக் கொண்டு திகழும். இங்ஙனம் பல்வேறு படிவங்கள் கொண்ட பல விளங்காளைகள் அத்தொழுவத்திலே நிற்பது, ஒரு மலைக் குகையினிடத்தே அரிமாவேறுகளும், கரிமாத்திரளும், பாய்மா நிரையும், பற்களாற் கொடிய முதலைகளும் கூடி நின்ற கொடுங் காட்சியை விளக்கா நிற்கும். இதனையே கலித்தொகையில்,

" மணிவரை மருங்கி னருவி போல
அணிவரம் பறுத்த வெண்காற் காரியும்
மீன்பூத் தவிர்வரு மந்திவான் விசும்புபோல்
வான்பொறி பரந்த புள்ளி வெள்ளையும்
கொலைவன் சூடிய குழவித் திங்கள்போல்
வளையுபு மலிந்த கோடணி சேயும்
பொருமுரண் முன்பிற் புகலேறு பலபெய்(து)
அரிமாவும் பரிமாவுங் களிறுங் கராமும்
பெருமலை விடரகத் தொருங்குடன் குழீஇப்
படுமழை யாடும் வரையகம் போலும்
கொடுஞ்சரை சூழ்ந்த தொழூஉ,"

என அழகாகக் கூறியிருப்பதைக் காணலாம்.

அத்தொழுவினை யடுத்துப் பல பரண்கள் கட்டப்பட்டு விளங்கும். அவற்றில், மணப்பருவமுற்ற ஆயமகளிரும், அவர் தந்தோழிமார்களும் இளங்காளையர் சேவினந்தழுவுந் திறன் காண்பான் சேர்ந்து வீற்றிருப்பர். சேவினந்தழுவுஞ் செல்வர் கள் முல்லைநிலப் பொருள்களு ளொன்றாகிய கொன்றைப்பூ, கஞ்சங்குல்லைப்பூ, முல்லைப்பூ முதலிய மலர்களைத் தலையிற் சூடி, தொழுவி னரணகத்தே துடித்து நிற்பர். இந்நிலையினை,

"மெல்லிணர்க் கொன்றையு மென்மலர்க் காயாவும்
புல்லிலை வெட்சியும் பிடவுந் தளவும்
குல்லையுங் குருந்துங் கோடலும் பாங்கரும்
கல்லவுங் கடத்தவுங் கமழ்கண்ணி மலைந்தனர்
பல்லான் பொதுவர் கதழ்விடைகோட் காண்மார்
முல்லை முகையும் முருந்து நிரைத்தன்ன
பல்லர் பெருமழைக் கண்ணர் மடஞ்சேர்ந்த
சொல்லர் சுனங்குழைக் காதினர்
நல்லவர் கொண்டார் மிடை,"

என்ற கலித்தொகை யடிகளிற் காணலாம். பின்பு, இச் சேவினந்தழுவலை முன்னின்று நடத்துவிக்கும் முல்லைநிலப் பெரியோர்கள் கருப்பொருள்களு ளொன்றாகிய ஏறுகோட் பறையினை முழக்குவிப்பர். அவ்வளவில், ஆயவிளைஞர்கள் தாம் வேட்ட மகளிர் தோளை யணைய விரும்பியவர்களாய்த் தொழுவத்தினுள்ளே குதிப்பர். எவ்வித விடையூறு மின்றிக் கொழுக்க வளர்ந்த காளைகள் அவ்விளைஞர்களிற் பலரைக் கோட்டாற் குத்திக், குருதியினையும், குடர்களையும் வெளிப் படுத்திக் கொடுமை விளைக்கும். அங்ஙனமாயும், அவ்வாய விளைஞர்கள் பின்னிடாது, முன்னேறிச் சென்று, அவ்வெருது களின் கோடுகளிற் சிக்கிய தங்குடரினை மீட்டுப் பெறுவான் மேற்செல்வர். இக்காட்சியினை, ஆயமகளிர் கண்டு வியப்ப தாகக் கூறியுள்ள,

"கோட்டோடு சுற்றிக் குலர்வலந்த வேற்றின்முன்
ஆடிநின் றக்குடர் வாங்குவான் பீடுகாண்!
செந்நூற் கழியொருவன் கைப்பற்ற வந்நூலை
முந்நூலாக் கொள்வானும் போன்ம்,"

என்ற கலித்தொகைச் செய்யுளுறுப்பின் கருத்திற் கண்டு தெளியலாம். இனி, சேவினந்தழுவிய செல்வனைக் கண்டு வியந்த கட்டழகி யொருத்தின் கூற்ருகவுள்ள,

"தோழீஇ!
காற்றுப்போல் வந்த கதழ்விடைக் காரியை
ஊற்றுக் களத்தே யடங்கக்கொண் டட்டதன்
மேற்ருேன்றி நின்ற பொதுவன் தகைகண்டை!
எற்றெருமை நெஞ்சம் வடிம்பி னிடந்திட்டுச்
சீற்றமோ டாருயிர் கொண்டஞான் றின்னன்கொல்
கூற்றென வுட்கிற்றென் னெஞ்சு,"

என்ற கலித்தொகை யடிகள் சேவினந்தழுவுஞ் செல்வர்களின் ஆண்மையை யளக்கு மளவுகருவிகளாம். மகட்கொடை நேரும் ஆயர்கட்குத் தமது மணமக்கள் கூற்றுடன்று மேல்வரினுங் கலங்காது நிற்கும் ஆற்றல் சான்ருராயிருக்க வேண்டுமென்னுங் கருத்துண்டென்பது இந்நிகழ்ச்சிகளால் நன்கு விளங்கும். அன்றியும், மணப்பெண்கள் தம்மை மணக்கும் மணமக்கள் ஆண்மையி லரியேற்றை யொத்து நிற்க வேண்டுமென்பதிற் கண்ணுங் கருத்தும் மிக்கிருந்தனர் என்பதைச் சேவினந்தழு வல் கண்டு அன்பர்கள் வியந்தமையாற் றெளியலாம். இன்னும்,

"விலைவேண்டா ரெம்மினத் தாயர் மகளிர்
கொலையேற்றுக் கோட்டிடைத் தாம்வீழ்வார் மார்பின்
முலையிடைப் போலப் புகின்,"

எனவும்,

"கொல்லேற்றுக் கோடஞ்சு வானை மறுமையும்
புல்லாளே யாய மகள்,"

எனவுங் கூறுங் கலித்தொகை யடிகள் அக்கால ஆயர்களின் மனப்பாங்கினையும், ஆயமகளிரின் மறக்காதலையும் வலியுறுத் தும். மக்களின் நெஞ்சத்தே அஞ்சாமையை வளர்க்கும் இம் முறைகள் அயனுட்டாருங்கண்டு அகமகிழ்தற்குரியனவாம். இம் முறைகளைச் சிறிது தழுவி மேனுட்டில் (Bull Fight) எருது களை யெதிர்த்தல் என்ற களியாட்டொன்று நிகழ்வதாகத் தெரி

கிறது. அக்களியாட்டில், வலிய காளை யொன்றினைப் பெரிய தொழுவத்தில் நிறுத்தி யடைத்து, வல்லானொருவன் கையிற் கருப்புக்கொடி யொன்றைக் கொடுத்து அதனைத் தழுவி யடக்கும்படிச் செய்தலாம். கருப்புக் கொடியினைக் கண்டு காளை மருளலும், கருப்புக் கொடியைக் கைவிடாது காளையைத் தழுவி யடக்க வேண்டிய அருமையுங் கண்காணிக்கற் பாலன. இந்நாட்டில் இக்காலத்தில் சேவினந்தழுவுமுறை யாதென்பதை அடுத்த கட்டுரையில் ஆராய்வோம்.

(தொடரும்.)

---

# திருவிசைப்பா வுடையார் துவாதச மாலை

(கூ-வது சிலம்பு, கஉ-வது பரல், ௩எ௰-ம் பக்கத் தொடர்ச்சி)

ஆறுவது செய்யுளிற் போற்றப்படுவார்

ரு. கருவூர்த்தேவர்

உற்றகரு வூரையர் வாம மாண்பி
னுயர்ந்தார்போற் பலசித்தி யுவப்பச் செய்து
பெற்றஊர்ந் தருளியைசற் றிருமால் தன்னைப்
பெரும்பதிகள் பலவற்றுட் கண்டு பாடிக்
கற்றவர்சேர் தஞ்சையிடைச் சமாதி மேவிக்
கருதரங்கப் பரத்தைக்கு மாலை தந்து
சுற்றுமறி ஞர்பரவக் கருவூர் வேந்தாய்ச்
சுரர்புகழ வரனுருவிற் றலங்கி னாரே.

(இ-ள்.) கருவூரில் அந்தணர் வருணத்திற் றோன்றிய சித்தர் சாத்தேய வழிபா டுடையவர் போலச் சைவ மாண்பின் நின்று அளவிறந்த கன்ம யோக ஞான சித்திகளைச் செய்து, சிவபெருமானையும் திருமாலையும் பல தலங்களிற் சென்று பணிந்து, திருப்பதிகங்களாற் பரமசிவனைத் துதித்துத் தஞ்சாவூரிற் சிவசமாதிநிலை யடைந்து, மீண்டும் உலக சஞ்சாரஞ் செய்து, திருவரங்கத்தில் கணிகை யொருத்திக்கு அரங்கநாத

ர்து மாணிக்க மாலையைத் தந்து, ஆதிபுரியிற் சிவஞான நிஷ்டாபராய் இலிங்கத்துட் கலந்தார் (எ-று.)

புராண சாரம் :—

(கருவூர்ப் புராணத்துட் கண்டது) திருக்கருவூரில் திருவுடை யந்தணர் மரபில் தோன்றிய சுந்தரர் கன்மயோக ஞான சித்திகளைச் சிவனருளாற் பெற்றுக் கருவூர்ச்சித்தராயினர். இக்கருவூர்த் தேவர் காயசித்தி பெற்றவ ராதலால் பரதகண்ட முழுவதும் உலாவிப் பல க்ஷேத்திரங்களைத் தரிசித்தார். இவர் கருவூரில் வசித்தபோது வாமசாரம் உடையவர்போற் புலப்பட்டபடியால் இவரது உண்மை நிலையை யறியாத சில வேதியர் இவரை வெறுத்து அரசன்பால் முறையிட அம் மன்னன் உற்று நோக்குகையில் இவரது தூய்தன்ம்மய்யும் ஏனையோரது அபக்குவ தன்மைய்யயுங் கண்டு இவர் பக்கல் அன்புடையவனுன். கருவூர்த் தேவர் செய்தருளிய அற்புதங்கள் அனந்தம். ஒரு சமயம் இவர் திருப்பூவணம் சென்று திருவிசைப்பா பாடி, குருகூருக்கு வந்து, ஆங்குத் திருமால் ஆணைப்படி அடியார் எதிர்கொண் டழைக்க உட்சென்று, அவ்வூர் நாயும் சுவர்க்கம்பெற ஆசிகூறித் திருநாரணனைப் பரவிச், செந்தூரை வணங்கி, நெல்லையம்பதி சேர்ந்து நெல்லையப்பரை வெளியே வர வேண்ட, பெருமான் வராது தாழ்க்க, அப்பதியைச் சீறிப் பின்னர் வாழ்த்தி, அந்நகரின் மேற்றிசையிற் சிவலிங்கம் ஒன்று கண்டு தாபித்துப் பூசிக்கச் சிவபிரான் காட்சி கொடுக்கக் கண்டு தரிசித்து மகிழ்ந்து, திருப்புடைமருதூரைப் போற்றிக், கஜேந்திர மோக்ஷத்தில் ஹரியைத் துதித்து, முண்டீச்சரம் வாழ்த்தி, அங்குக் காளியம்மையால் மதுவும், வன்னி மரத்தால் மச்சமும் பிறவும் பெற்று, உண்மையாகிய சத்தி பூசை இஃதென வாமிகளுக்கருள்செய்து, பொதிய மலை சார்ந்து சிவயோகத்தி லமர்ந்தார். பின்னர்த் திருத்தஞ்சை சேர்ந்து மகாலிங்கத்தைப் போகநாதரது அநுமதிப்படி நிறுத்தித் தமது வாய்த் தம்பலத்தா லிறுகச் செய்து யாவருங் கண்டு மகிழும்படி இராஜராஜேச்சரத்தில் சிவசமாதியில் வீற்றிருந்தருளினர். ஆண்டு பல கழிய,

சித்தர் எழுந்தருளித் தில்லை, களந்தை—ஆதித்தேச்சுரம், கீழ்க் கோட்டூர் மணியம்பலம், முகத்தலை, திரைலோக்கியசுந்தரம், கங்கைகொண்ட சோளேச்சரம், சாட்டியக்குடி முதலிய திவ்விய தேசங்களைத் தரிசித்துத் திருப்பதிகம் பாடி மீண்டும் தஞ்சைக்கு வந்து மகாதேவரைத் துதித்து, ஆனைக்காவையும் அரங்கத்தையும் போற்றி, அரங்கத்திற் றம்மைக் காதலித்த கணிகைக்கு அரங்கநாதரது மாணிக்க மாலையை அற்புதத்தால் அழைத்து அளித்துக் கருவூர்ப் புக்கிருந்தார். மறுநாள் மணிவண்ணர்பால் மாணிக்கமாலையைக் காணாத மணியரங்கத்து அதிகாரிகள் அதனைப் பரத்தைபாற் கண்டு உசாவுகையில் ஆகாயவாணியால் உண்மை தெளிந்து தேவரைக் கண்டு பணிந்தனர். இவ்வண்ணம் பல அற்புதங்களைச் செய்து கருவூர்த் தேவர் ஆதிபுரியில் அந்தணர் பலரும்போற்றப் பசுபதீச்சரத்து மகாலிங்கத்துட் புகுந்து கலந்தருளினர். (6)

ஏழாவது செய்யுளிற் போற்றப்படுவார்

4. பூந்துருத்தி நம்பி காட நம்பி

துலங்குதிருக் கச்சிநகர்க் காட ராயர்
தொல்குலத்துத் தராதிபராய்ச் சோணு டாண்டு
விலங்குபெருஞ் சமருழக்கிச் சைவ வாய்மை
மேதினியிற் பரப்பிநந்தி மரபிற் றோன்றி
யிலங்குகுரு பர்நூற்றே டெண்மர் தம்மை
யிறைஞ்சிப்பூந் துருத்திமடத் தியோகி ஞர்ந்து
பலங்குலவ வாரூரும் பொதுவும் பாடிப்
பரமனுர் திருவடிக்கீழ்ச் சிரம்வைத் தாரே.

(இ-ள்.) காஞ்சிபுரத்தில் தொண்டைப் பல்லவராகிய பிராமணக்ஷத்திரிய மரபிற் றூவுதயமான காடவ நம்பி, திருப்பூந்துருத்தியைத் தமது இராஜதானியாகக் கொண்டு சோழநாட்டைப் புரந்து, வைதிக சைவ சமயத்தைப் பரிபாலித்துத் திருநந்திதேவர் மரபின் வந்த சிவாசாரியர் நூற்றெண்மரையும் ஆசரித்து, பூந்துருத்தியிற் சைவ மடம் ஒன்றை நிறுவி, சிவஞான யோகியாகித் திருவாரூரையும் திருத்தில்லை யம்பலத்தை

யும் புகழ்ந்து பாடிப் பொன்னம்பலத்தில் ஆனந்த நடனஞ் செய்யும் குஞ்சித பாதத்தையே தமது சிரசுக்குத் திருமுடியாகப் பெற்றாய்ந்தார். (எ-று.)

காஞ்சிபுரத்திற் காடவர் மரபிற் பிறந்த நம்பியார் சோழ நாட்டைப் பூந்துருத்தியிலே யிருந்து அரசாண்டு வந்தார். அவ்விடத்திற்றானே சைவ மடாலயமொன்றை நிர்மாணித்து, சைவ சம்பிரதாயங்களைப் பரவச்செய்து வந்ததுமன்றி இவர் சைவாசாரியர்கள் நூற்றெண்மரையுங் கண்டு தரிசித்துச் சிவாகமங்களின் ஞானபாதப் பொருளின் மலைவு தீர்ந்தவராய்ச் சிவஞானியாகி, திருவாரூரை யடைந்து தியாகராஜப் பெருமானை உள்ளன்போடு திருப்பதிகம் பாடித் துதித்து, பின்னர்த் தில்லையம்பலஞ் சார்ந்து, கணம்புல்ல ருள்ளிட்ட பல பெரியார் வரலாற்றைக் கண்டு மகிழ்ந்து திருச்சிற்றம்பலமுடையாரைத் திருப்பதிகத்தாற் போற்றிப் புகழ்ந்து இறையனார் திருவடியிற் கலந்தருளினார். (7)

எட்டாவது செய்யுளிற் போற்றப்படுவார்

## 5. கண்டராதித்தர்

சிரமொன்று பேர்படைத்த தஞ்சைத் தோன்றல்
    சீராஜ கேசரியார் கண்டர் பாறு
தரமொன்று முணராதேம் குடியை யாண்டார்
    தம்பெயராற் புரங்கண்டார் தமதில் லத்துப்
பரமொன்றுந் தாண்டவனைப் பாடும் மெய்யர்
    பரமானந் தத்துண்மை பயிலும் நாவர்
கரமொன்று புலிக்கொடியா ரானே றேந்துங்
    காரணர்பூ ரணரானார் நல்லர் தானே.

(இ-ள்.) சென்னி மரபில் வெண்ணிக்கூற்றத்துத் தஞ்சாவூரில் சுப ஜனனம் ஆன கண்டராதித்த ஸ்ரீராஜகேசரியார் தமது குடிகளையெல்லாம் நன்மைபெறப் பாலித்து, கண்டராதித்தம் என்னும் திருநகரை நிர்மாணித்துத் தமது குலதெய்வமாகிய தாண்டவராயனைத் திருச்சிற்றம்பலத்திற் பாடி, பரம முதற்காரணராகிய நல்லமுடையார் திவ்விய சிதாகாயத்திற் பரிபூரணரானார். (எ-று.)

3683



புராணசாரம்:—

(சாசனங்களால் இவர் பராக்கிரமம் உணர்க)

திருத்தஞ்சை மாநகரில் சோழர்குடியில் முதற் பராந்தக சோழவரசர்க்குப் புத்திரரா யவதரித்த கண்டராதித்தர் இராஜ கேசரியார்-I சைவ மன்னராகப் புனல்நாட்டைப் புரந்து வந்தார். இவருடைய பத்தினியார் வீரநாராயணியார், செம்பியன் மாதேவியார் என்னும் இருவர் ; இவர் புத்திரர் செம்பியன் மாதேவியாரிடம் உதித்த மதுராந்தகர். இவ்வளவர் பெருமான் காவிரிநதியின் வடகரையிற் கண்டராதித்தச் சதுர்வேதி மங்கலம் என்னுந் திருநகரத்தைக் கண்டு, மகேசுரரிடத்தும் பிராமணரிடத்தும் மிக்க அன்புடையராய், சிவபக்தி முதிர்ந்து ஞானச் செல்வராகி, தமது குலதெய்வமாகிய திருத்தில்லை அழகிய திருச்சிற்றம்பல முடையாரை ஆனந்தத் திருப்பதிகத்தாற் பாடி அகமகிழ்ந்து, கோனேரி ராஜபுரம் என்னும் திருநல்லத்தில் தமது மாதேவியாரோடும் புத்திரரோடும் சிவலிங்கப் பெருமானைச் சதாகாலமும் கும்பிட்டுக்கொண்டு நிரதிசயானந்த நித்திய சாம்பிராஜ்ஜியத்தை அடைகின்றார். (8)

ஒன்பதாஞ் செய்யுளிற் போற்றப்படுவார்

### 6. வேணாட்டடிகள்

நல்லகுலப் பெண்மணிக ளரன்சீர் பாடும்
நற்றவத்து வேணாட்டி னல வாயின்
வில்லுயர்த்த கொடியுடையார் இளமை தொட்டே
வீறடிக ளாய்வாழ்ந்தா ருடனேய் நீங்கச்
சொல்லுசிவ கங்கைகுடைந் தருட்கூத் தாடுந்
துரியபரம் பொருள்பாடிச் சுகாதீ தத்து
வல்லதொழி லறிவிற்றம் வினையும் ஞான
வாய்மையுமே வுறப்பெற்று றறப்பெற் றாரே.

(இ - ள்.) பெண்களுள் நாயகம் போல்வார் பரமசிவனை எக்காலமும் பாடியாடும் கேரள நாட்டின் தென்பகுதியாகிய வேணாட்டில், ஆலவாய் என்னும் நகரில், சேர்குடியிற்றோன்றிய வேணாட்டடிகள் இளமைப் பருவத்திலேயே இவ்வுலகப் பற்றை

யொழித்துத் தம்முடலில் இருந்த நோய் நீங்குதற்பொருட்டும் தில்லையிற் சிவகங்கையில் தீர்த்தமாடிப் புனிதராய், பொன்னம் பலத்திற் சிவபெருமானுடைய கிரியை ஞானங்களில் தமது கிரியை ஞானங்கள் வியாபிக்கும்படிப் பரமுத்தியைப் பெற்றார். ()

புராண சாரம்:—

வேணாட்டில் ஆலவாய் என்னும் திருப்பதியில் வானவரம்பர் மரபி லவதரித்த அடிகள் இளமையில் நிலையாமையை யுணர்ந்து புறப்பற்று அகப்பற்று ஒழித்துச் சிவஞான தியான பரராய்த் தலயாத்திரை செய்துகொண்டுவருங் காலத்தில், திருத்தில்லையிற் சிவகங்கையில் மூழ்கித் தம துடற்பிணி நீங்கி, "துச்சான செய்திடினும்" என்று தொடங்கித் திருப்பதிகம் பாடி விதேக கைவல்யத்தைப் பெற்றார். (9)

பத்தாவது செய்யுளிற் பாடப்படுவார்

## 7. திருவாலியமுதனார்

*அறமுணர்ந்த நான்மறையார் மயிலை சார்ந்த*
*ஆலிநக ரமுதனா ரப்பேர் வாய்ந்து*
*மறங்கடிந்த புலவர்போல் மறலி வென்றார்*
*மாற்றாரைச் சிவகலையால் வென்று வேத*
*வுறும்பனுவல் கருத்தானே மெய்த்தே வென்னு*
*வுலகறிய வரற்பணிந்து கோயி லோதி*
*நிறங்குலவு கொன்றையணி மன்று ளார்தம்*
*நிருத்தபத மருத்தியொடு முருசித் தாரே.*

(இ - ள்.) கௌரி மாயூரத்திற்கு ஈசானிய திசையிலுள்ள திருவாலி நகரில் வேதியர் குலத்தில் கடைச்சங்க மருவிய ஆலியமுதனார் பரம்பரையில் அவதரித்த திருவாலியமுதனார் சிவயோக பலத்தால் மரணபயத்தைத் தவிர்த்து, புறச்சமயத்தாரைத் தந்திரகலை மந்திரகலை உபதேச கலைகளாற் கடிந்து சைவ சற்சம்பிரதாயத்தை நிலை நாட்டி, வேதத்திற் கூறிய பரம்பொருள் உருத்திரனே யென்று உலினர் யாவருந் தேற மகாதேவனைச் சைவாகம விதிப்படி யருச்சித்து, திருத்தில்லைத் திருக்கோயிலைப்பாடி நிருத்தனார் திருத்தாள் நீழலை அடைந்தார். ()

புராணசாரம் :—

சோழ மண்டலத்தில் திருவாலி நாட்டுத் திருவாலியில் பிராமண ஜாதியில் அமுதனர் திருவவதரித்தார். (மாயூரத்திற் பிறந்தவராகவும் சில அறிஞர் கூறுவர்). இவர் வேதசிவாகமங்களை ஐயந்திரிபறக் கற்றுணர்ந்து, வேத பிரதிபாத்தியனாகிய மகாதேவனைத் தைல தாரைபோ லிடையறாத நேயத்தோடும் வணங்கிப் புண்டரிக பொற்புரத்தைத் தரிசித்து ஆராமை மேலிட்டு ஆனந்தக் களிப்பின் அழுந்தி, மாந்தரனைவர்க்கும் சைவப் பொருளை விளக்கி, ஆதிமூர்த்தியின் சகளத்திருமேனியைப் பாதாதிகேச பரியந்தம் வருணித்துப் பாடி ஆராத காதல் மேன்மேன் முருக வேறு மூன்று திருப்பதிகங்களைக் கசிந்துருகிப்பாடி நிருத்தர் இருதாளைச்சேர்ந்தார். (10)

பதினோராவது செய்யுளிற் பாடப்பெற்றார்

8. புருடோத்தம நம்பி

உருகிமுத லைம்புலன்க ணுகர்வு மாங்கே
யுருத்திரனர் திருப்பதத்தே யாகுமென்று
வரிசைபெறப் புறச்சமயத் தவர்க்கு ணர்த்தி
வண்புருடோத் தமம்வந்த மறையோர் வாதம்
புரிசைவர் மாலடியார் இவர்தந் தர்க்க
வாதமெலா மொழியமறை நிகம வாய்மை
தருசைவ வான்பதியாந் தில்லை வாழ்த்தித்
தாணுவினைச் சதாகாலம் பேணுவாரே.

(இ - ள்.) ஐம்புலன்களின் நுகர்வும் அரனுடைய திருவடியின்கண் ணமர்வதென்பதை அவனி மாந்தர் அனைவருமுணருமாறு சோழ நாட்டில் திருவண்புருடோத்தமம் என்னும் திவ்விய தேசத்தில் மறையோர் குலத்தில் மகிதலம் உதித்த புருடோத்தமநம்பி என்பார் வைஷ்ணவர்களுக்கும் சைவர்களுக்கும் ஒருகாலத்து உண்டாகிய பெருங் கலகத்தைப் புராணேதிகாசப் பிரமாணங்களைக் காட்டி அடக்கி, வேத சிவாகமங்களின் கருத்து வேறுபடாமையை விளக்கி வேதாந்த சித்தாந்த சமரசாநுபவச் செல்வராய் ஒன்று அல்ல இரண்டு

அல்லவென்று மகா வாக்கியங்கள் ஓதும் உண்மைச் சிவநிலையிற் றில்லையைப் பாடி நிலைபெற்றருளினார். (எ - று).

புராணசாரம் :—

சோழ மண்டலத்துத் திருவாங்கூர் நாட்டுத் திருவண்புருடோத்தம நகரில் வைதிக சைவ வேதியர் மரபிற்றோன்றிய புருடோத்தமநம்பி மகேசுரனிடத்தும் மகேசுரரிடத்தும் உள்ளன்புடையாராய், ஐந்து பேரறிவுங் கண்களே கொள்ள, அந்நாட்டிலுள்ள பதினொரு சிவஸ்தலங்களையும் பதினொரு உருத்திரர்களையும் பணிந்து சைவ வைஷ்ணவ சமயங்களுக்கும் வேதாந்த சித்தாந்தங்களுக்கும் உண்மைப் பொருளாக விளங்கும் திருத்தில்லை யம்பலம் அடைந்து, இரண்டு திருப்பதிகங்கள் பாடித் திரிகரண சுத்தியோடு சிவாநந்த சாகரத்தில் திளைத்தருளினார். (11)

பன்னிரண்டாவது செய்யுளிற் பாடப்படுவார்

9. சேதிராயர்

பேணுபெருந் துறையாகுங் கோவ லூரிற்
　　பெருகியநற் சேதிமர புதித்த செல்வர்
தாணுசிவ சாதனநற் சார்பென் றூர்க்குத்
　　தமதாணை நிறுத்தியரன் கோயிற் பாடி
வேணுபுரத் தானடியார் யாருங் காண
　　விண்ணவரு நண்ணரிய மேன்மை யுற்றா
ர்ணுமலன் பெண்ணுமல னலியல் லான்பல்
　　லாண்டுளான் செம்பொன்மணி யம்ப லத்தே.

(இ - ள்.) பெண்ணை நதியில் யாவரும் விரும்பியாடும் பெருந்துறையாகிய திருக்கோவலூரிற் சேதிராயர் மரபில் உதித்த சேதிவேந்தர் சைவ சாதனங்கள் தமது நற்சார்பு என்று தமது ஆணையை நிலவச்செய்து, குருலிங்க சங்கம பூசைகள் தவறாது நடத்தி, திருத்தில்லையைப் பாடி, ஸ்ரீகாழித் திருக்கை கோட்டிகள் கண்காண, சிற்சபையிற் பேரொளியோடு கலந்தருளினார். (எ - று)

புராணசாரம் :—

சேதி நன்னாட்டு நீடுந் திருக்கோவலூரில் மலையமான் நத்தமான் சுதமான் என்னும் மூன்று பெண்ணைக்கரை வேளிர் குலத்துக்குத் தலைவராய், மலாடர் என்னும் குறுநில மன்னராய்ச் சேதிராயர் திருவவதரித்தார். இவர் முன்னோர் யாவரும் சிவபக்தி அடியார்பக்தியிற் சிறந்தவர். இவர் திருவெண்ணீறு திருக்கண்மணி திருவைந்தெழுத்து ஆகிய சைவ சாதனங்களை நற்சார்பெனக் கொண்டவர். தாம் அரசு செலுத்திய நாடு முழுவதும் சைவ நீதியிற் பொலியுமாறும், குருலிங்க சங்கம வழிபாட்டிற் சிறக்குமாறும் மனு அரசு செலுத்தி மெய்ஞ்ஞானநுபவம் பெற்றுத் திருத்தில்லையை யடைந்து ஆண்டு வந்திருந்த காழிச் சிவனடியார் யாவரும் கண்காணத் திருப்பதிகம் பாடிக்கொண்டே சிற்சபையிற் றோன்றிய பேரொளிப் பிழம்பிற் கலந்தருளினர். (12)

திருவிசைப்பாவுடையாரை ஆராதிக்கும் தினம்

நண்டு தெறுக்கால் களிர்கடன் மச்சமெனு
மொண்டிறற் றிங்க ளுவைநீங்கக்—கண்டுகொள்
மற்றைமதி பூரணையே மாளிகைத் தேவர்முத
னற்றவரை யாசரிக்கு நாள்.

(இ - ள்.) ஆடி, கார்த்திகை, பங்குனி இம்மாதங்களிற் றவிர மற்றைச் சித்திரை முதல் ஒன்பது மாதங்களில் வரும் பௌர்ணிமைத் திதிகள் முறையே திருமாளிகைத் தேவர் முதலிய ஒன்பதின்மரை வழிபடுதற்கும், அன்னார் திருப்பண் சாத்து முறை செய்தற்கும் ஏற்ற நைமித்திகத் திருநாட்களாம்; ஆதலின் அந்நாட்களில் இம்மகான்களை யாம் வணங்கி இம்மை யின்பத்தையும் மறுமை யின்பத்தையும் வீடுபேற்றையும் பெற்று வாழ்வேமாக.

---

# கடவுளுக்கும் உயிருக்குமுள்ள அத்துவித இயைபு

[திருவாளர் மா. வே. நெல்லையப்ப பிள்ளை அவர்கள்]

சிவநெறிச் செல்வர்களே !

உள்ளனவாகிய பொருள்கள் மூன்று; அவை கடவுள், உயிர், உயிரில்லாத உலகம் (பதி பசு பாசம்) என்பன. இந்த மூன்று பொருள்களும் ஒன்றுக்கொன்று இயைபு உடையன. கடவுளுக்கும் உயிருக்கும் இயைபு உளது; கடவுளுக்கும் உயிரில்பொருளுக்கும் இயைபு உளது; உயிர்களுள் ஒன்றுக்கும் பிறிதொன்றுக்கும் இயைபு உளது. உயிருக்கும் உயிரில் பொருளுக்கும் இயைபு உளது; உயிரில்பொருள்களுள் ஒன்றுக்கும் பிறிதொன்றுக்கும் இயைபு உளது. இவைகளன்றி கடவுளாகிய இறைவனுக்கும் இறைவிக்கும் இயைபு உளது. இந்த இயைபு வகைகளுள் நான் கட்டுரையாக எழுதப் பணிக்கப்பட்ட பொருள், 'கடவுளுக்கும் உயிருக்குமுள்ள அத்துவித இயைபு' என்பது.

## I. சொல் விளக்கம்

உ. கடவுளுக்கும் உயிருக்கும் உள்ள அத்துவித இயைபு என்ற சொற்றொடரில் கடவுள், உயிர், அத்துவிதம், இயைபு என்னும் நான்கு சொற்கள் விளக்கப்படுவனவா யுள்ளன. இந்த நான்கு சொற்களில் அத்துவிதம் என்றசொல்லே ஆணிச் சொல்லாய் விளங்குகிறது. சொல்லின் பொருளை முதலாவது உணர்ந்து உரைத்து அப்பாற் செல்லுதல் முறைமையாகலின் இந்த நான்கு சொற்களின் பொருளை ஒன்றன்பின் ஒன்றாய் ஆராய்வாம்.

ங. கடவுள் என்ற சொல் தமிழ்மொழிச் சொல். அது 'கட' என்ற பகுதியாலும் 'உள்' என்ற தொழிற் பெயர் விகுதியாலும் ஆகியது. கடத்தல் என்று பொருள்படும் கடவுள் என்ற சொல் ஆகுபெயராய் உயிரையும் உயிரில்உலகத்தையும் அஃதாவது உயிர்அறிவையும் (பசு ஞானத்தையும்) உயிரில்

உலக அறிவையும் (பாச ஞானத்தையும்) கடந்து நிற்கிற ஒரு தனிப் பொருளைக் குறிக்கிறது.

௪. உயிர் என்ற சொல்லும் தமிழ்மொழிச் சொல். உயிர் என்னும் முதனிலைத் தொழிற்பெயர் உயிர்ப்பு அல்லது உயிர்த்தல் என்று பொருள்படும். உயிர்த்தல் ஆவது மூச்சு விடுதலாகும் (Breathing). மூச்சுவிடும் செயலானது அசைதலுக்கு அடிப்படையா யுள்ளது. உடலானது தானிருக்கிற இடத்திலிருந்து தனது உறுப்புக்களை அசைத்தற்கும் இடம் பெயர்ந்து அசைதற்கும் மூச்சுவிடுதல் இன்றி அமையாததா யிருக்கிறது. நோயுற்ற ஒருடலில் உயிருண்மையும் உயிரின்மையும் மூச்சு நோக்கித் துணியப்படுகிறது. உயிர்ப் பொருளுக்கும் உயிரில் பொருளுக்குமுள்ள வேறுபாடு மூச்சு உண்மையினாலும் மூச்சு இன்மையினாலும் பகுத்து அறியப்படுகின்றது. இன்னும் மக்களுயிர் மும்மலப் பிணிப்பினுள்ள அறியாமையினின்றும் நீங்கிக் கடவுளை அறியும் அறிவொளியை அடைதலானது இடகலை பிங்கலை நாடிகளிலே செல்லுகிற மூச்சை யொடுக்கிச் சுழுமுனை நாடி வழியாய்ச் செல்லவிடுதலினாலே யாம். இவ்வாறு உலக நெறியிலும் வீட்டு நெறியிலும் உயிருக்கு மூச்சு விடுதலும் மூச்சு ஒடுக்கலும் முதன்மையான தொழிலா யிருத்தலால் உயிர்ப்பொருளுக்கு 'உயிர்' என்ற சொல் தமிழ் முன்னோர்களால் வழங்கப்பட்டு வந்ததாக நாம் அறியலாம்.

௫. அத்துவிதம் என்ற சொல் **अद्वितीयं** (அத்விதீயம்) அல்லது **अद्वैतं** (அத்வைதம்) என்ற வடமொழிச் சொற்களிலிருந்து சிதைந்து தமிழ்மொழியில் வழங்கப்படும் சொல். **द्वि** (த்வி) என்ற எண்ணுப் பெயர் வடமொழியில் இரண்டு என்றும் **द्वितीय** (த்விதீய) என்ற சொல் இரண்டாவது என்றும் **द्वितीयं** (த்விதீயம்) என்ற சொல் இரண்டு தன்மை அல்லது இருமை என்றும் பொருள்படும். **द्वितीयं** (த்விதீயம்) அல்லது **द्वैतं** (த்வைதம்) என்ற சொல்லின் முன் **न** (ந) என்ற உபசர்க்கம் (Preposition) சேரும் பொழுது வடமொழி இலக்கண வழக்குப்படி **न**கர (நகர) உயிர் மெய்யிலுள்ள **न**கர (நகர) ஒற்றுக்கெட்டு **अ** (அ) என நிற்கின்றது. இந்த **अं** (அம்)

द्वितीयं (த்விதீயம்) அல்லது द्वैतं (த்வைதம்) சேர்ந்து अद्वितीयं (அத்விதீயம்) அல்லது अद्वैतं (அத்வைதம்) என ஆகின்றன. இவ்வாறு अद्वितीयं (அத்விதீயம்) அல்லது, अद्वैतं (அத்வைதம்) என வந்த வடமொழிச் சொற்களே தமிழ் மொழியில் அத்துவிதம் என வந்து வழங்கப்படுகின்றன. வடமொழி இலக்கண வழக்கில் நகாரம் அன்மை இன்மை மறுதலே என்னும் மூன்று பொருள்களை உணர்த்தும் अब्राह्मण: (அப்பிராமணன்) अमलं (அமலம்) अनीति: (அநீதி) என்ற வடமொழிச் சொற்கள் முன்வந்த அகரம் முறையே அன்மை இன்மை மறுதலேப் பொருள்களை உணர்த்துகின்றது. ஆனால் எண்ணுப் பெயர் முன் வந்த, நகர உயிர்மெய்யில் நகர ஒற்றுக்கெட்ட அகரம் அன்மைப் பொருள் ஒன்றனையே உணர்த்தும் என்பது வடமொழி இலக்கண வழக்கு. இவ்வாறு வடமொழி இலக்கண வழக்குப்படி 'அத்துவிதம்' என்ற சொல் இரண்டு அன்மை அதாவது இரண்டு தன்மை அன்மை அல்லது இருமை அன்மை என்று பொருள்படும். அது இரண்டு இன்மை என்றாவது இரண்டின் மறுதலே என்றாவது பொருள் படாது.

௬. இயைபு என்ற தமிழ்மொழிச் சொல் 'இயை' என்ற பகுதியாலும் 'பு' என்ற தொழிற் பெயர் விகுதியாலும் ஆகியது. இயைதல் இயைபு என வழங்குதலும் உண்டு. இயைபு என்பது இரண்டு பொருள்கள் அல்லது இரண்டுக்கு மேற்பட்ட பொருள்கள் ஒன்றோடொன்று முரணுதலின்றிப் பொருந்துதல் ஆகும்; 'இய' என்ற அடிச் சொல் (root) சிறிது ஓசை வேறுபட்டு 'இயை' என வந்திருத்தலினால் இயக்குதல் என்ற கருத்தும் இயைபு என்ற சொல்லில் அடங்கியுள்ளது. இரு வேறு அறிவுப் பொருள்கள் இயைபு உடையனவாய்ச் சேரும்பொழுது ஒன்று மற்றொன்றினை இயக்கவும் செய்கின்றது.

## II. சொற்றொடர் விளக்கம்

௭. கடவுளுக்கும் உயிருக்குமுள்ள அத்துவித இயைபு என்ற சொற்றொடரிலுள்ள சொற்களின் பொருளைச் சேர்த்துச்

சுருக்கமாய் நாம் கூறுமிடத்து அச்சொற்றொடரினால் கடவுள் உயிர் என்ற இரண்டு அறிவுப் பொருள்களும் ஒன்றோடொன்று இயைபு உடைய பொருள்களாய் ஒன்று மற்றொன்றினை இயக்கும் பொருள்கள் என்பதும் அந்த இயைபு 'அத்துவிதம்' என்னும் சொல்லின் பொருளாற் குறிக்கப்படுகிறது என்பதும் பெறப்படுகின்றன. இந்த அத்துவித இயைபு எத்தன்மையது என்பதை நாம் அறியக் கடவுளினது பண்பையும் உயிரினது பண்பையும் அறிதல்வேண்டும். ஆதலின் அவற்றை நாம் கருதுவாம்.

## III. கடவுளினது பண்பு

அ. கடவுள் ஒப்பற்ற தனிப்பொருள்; அவன் அநாதியே மலமில்லாதவன்; தானாக விளங்குகிறவன் (சுயம்பிரகாசன்). அவன் யாதொரு பொருளிலும் பற்றின்றி யிருக்கவும், தன்னை எல்லாப் பொருள்களும் பற்றி நின்று விளங்கும்படியான தன்மை உடையவன். அவன் யாதொரு குறையுமில்லாதவன்; இன்ப உருவினன். அவன் எல்லாப் பொருள்களையும், கருவிகளின் துணையின்றி, ஒருசேர அறிந்தாங்கு அறிகின்றவன். அவன் தன்வயத்தனாதல் முதலிய எண் குணங்களையும் உடையவன். அவனுடைய நிறைந்த பண்புகளெல்லாம் நிறைவு அறிவு (வியாபக அறிவு—Universal Consciousness) என்ற சொற்றொடராற் குறிக்கப்படும்.

## IV. உயிர்களினது பண்பு

௬. உயிர்கள் ஓரறிவு உயிர்கள்முதல் ஆறறிவு உயிர்கள் வரைப் பலவாறாய் எண்ணில்லாதன. உயிர்களெல்லாம் அநாதியே மலத்தாற் கட்டுப்பட் டிருக்கின்றவைகள். அவைகள் சார்பு இன்றித் தனித்து இயங்கும் ஆற்றலில்லாதவைகள்; ஒன்றனைச் சார்தலும் சார்ந்தவண்ணமாதலுமுள்ள தன்மை உடையவைகள். அவைகள் எல்லாமும் கடவுளது அருளைத் துணையாகக் கொண்டு தங்களுடைய குறைகளை நீக்க வேண்டியவைகள். பலவாறான உயிர்களில் ஆறறிவுடைய மக்கள் உயிர்கள் மாத்திரம் தெளிவின் பொருட்டு இங்கே பேசப்படும். மக்கள் தங்கள் அறிவு மலத்தாற் றடைப்பட் டிருத்தலினாலே உல

கப் பொருள்களை ஒன்று ஒன்ருய் அறிதலும், முன் அறிந்த தைப் பின் மறத்தலும், முன் அறிந்ததைப் பின் மயங்கி அறிதலும் செய்யும் குறைவு உடையவர்கள். அவர்களுடைய குறைந்தபண்புகளெல்லாம் சிற்றறிவு (Limited Consciousness or Individual Consciousness) என்ற சொற்ருெடராற் குறிக்கப்படும்.

## V. கடவுளுக்கும் மக்கள் உயிர்களுக்குமுள்ள அத்துவித இயைபு எத்தகையது என்பது

௧௦. இவ்வாறு கடவுள் நிறைவு அறிவும் மக்கள் சிற்றறிவு முடையவர்களா யிருக்கிற காரணத்தால், கடவுள் ஒருவன் மக்களை ஆளுந்தன்மையும் மக்கள் பலர் கடவுளுக்கு அடங்கி ஒழுகி அவனுல் ஆளப்படுந் தன்மையுமுள்ள இயைபே அந்த இருவகை அறிவுப் பொருள்களுக்கும் பொருத்தமான இயைபு என்பது தெளிவு. இந்த இயைபினுல் சிற்றறிவுடைய மக்களே கடவுளால் எல்லா நலங்களையும் அடைகிறவர்களா யிருக்கிருர்கள். கடவுள் ஆளுகிறவனுயும் மக்கள் ஆளப்படுகிறவர்களாயுமுள்ள இந்த அத்துவித இயைபில் மக்களுடைய அறியாமைக் காலத்தில் கடவுள் மக்களைத் தொடர்ந்தும் மக்கள் தங்களுக்குக் கடவுளைப்பற்றிய அறிவு வந்த காலத்தில் கடவுளைத் தொடர்ந்தும் ஒழுகுதலினுலே அத்துவித இயைபு, "ஆண்டான் அடிமைத் தொடர்பு என்று கூறப்படும். அறிவு வந்த காலத்தில் மக்கள் கடவுளைத் தொடரும் தொடர்பு, பின்செல்லுதல், பிடித்தல், பற்றுதல், சேர்தல், தழுவுதல், கலத்தல் ஆகிய நிலைகளை ஒன்றின்பின் ஒன்ருயுடையதாகும். இந்தத் தொடர்பு நிலைகளை மணிவாசகப் பெருமானுடைய திருவாசகப் பாக்களில் நாம் காணலாம். கடவுளுக்கும் எல்லா உயிர்களுக்குமுள்ள இந்த ஆண்டான் அடிமைத் தொடர்பு அநாதியே உள்ளது; எக்காலத்தும் விட்டு நீங்காதது; வீடுபேற்றின் காலத்தும் உள்ளது.

## VI. அத்துவித இயைபுப் பாகுபாடு

௧௧. அத்துவித இயைபு மக்களுடைய அறியாமை நிலை பற்றியும் அறிவு நிலைபற்றியும் இருவகைப்படும். அறியாமை

நிலைபற்றியுள்ள அத்துவித இயைபில் கடவுள் மக்களுக்குச் செய்யத்தகுங் கடனும் மக்கள் கடவுளுக்குச் செய்யத்தகும் வழிபாடும், அறிவு நிலைபற்றியுள்ள அத்துவித இயைபில் கடவுள் மக்களுக்குச் செய்யத்தகும் கடனும் மக்கள் கடவுளுக்குச் செய்யும் வழிபாடும் வேறுபடுகின்றன. இவ்வேறுபாடுகளை நன்கு அறிதற் பொருட்டும் விளக்குதற் பொருட்டும் அத்துவித இயைபு இருவகையாகப் பாகுபாடு செய்யப்பட் டிருக்கின்றது. மக்களுடைய அறியாமை நிலை, கட்டு நிலை (பெத்த நிலை) என்றும் அந்நிலையில் அவர்கள் ஒழுகும் நெறி, உலகநெறி (பிரவிருத்தி மார்க்கம்) என்றும் அவர்களுடைய அறிவுநிலை வீட்டுநிலை (முத்தி நிலை) என்றும் அந்நிலையில் அவர்கள் ஒழுகும் நெறி வீட்டுநெறி (முத்தி நெறி அல்லது நிவிர்த்தி மார்க்கம்) என்றும் கூறப்படும். மக்கள் உலக நெறியில் உலக நுகர் பொருள்களிற் பற்றுடையவர்களாய் அவைகளை விரும்பித்தேடி நுகரும் முயற்சி உடையவர்களா யிருத்தலின் உலக நெறி, நுகர்வு நெறி (போகநெறி) என்றும், வீட்டு நெறியில் உலக நுகர்பொருள்களில் உவர்ப்பு அடைந்து அவைகளிற் பற்று விடுகிறவர்களாய்க் கடவுளைச் சேர விரும்பி ஈதல் நோன்பு அறங்களைச் செய்யும் முயற்சி உடையவர்களா யிருத்தலின், வீட்டு நெறி, யோக நெறி என்றுங் கூறப்படும். கட்டு நிலைக் காலத்தில் கடவுளுக்கும் மக்களுக்குமுள்ள அத்துவித இயைபு, அத்துவிதப் பொது இயைபு என்று கூறப்படும். கட்டு விடுதி பெறத் துவக்குங்கால முதல் வீடு அடையுங் காலம் வரையுள்ள வீட்டு நிலைக் காலத்தில் கடவுளுக்கும் மக்களுக்குமுள்ள அத்துவித இயைபு அத்துவிதச் சிறப்பு இயைபு என்று கூறப்படும். அத்துவிதச் சிறப்பு இயைபு வீடு அடைந்த பின்னும் உள்ளது. அத்துவிதப் பொது இயைபு சிவஞான போதம், உ, ரு, சு சூத்திரங்களிலும் அத்துவிதச் சிறப்பு இயைபு அந்நூல் அ, கூ, க0, கக, கஉ சூத்திரங்களிலும் கூறப்பட்டுள்ளன. அத்துவிதப் பொது இயைபு கருவி அறிவைத் துணையாகக் கொண்டு கடவுளுடைய பொது இயல் (தடத்த இலக்கணம்) அறியுமாற்றானும், அத்துவிதச் சிறப்பு இயைபு அருள் அறிவைத்

துணையாகக் கொண்டு அவனுடைய சிறப்பு இயல் (சொருப இலக்கணம்) அறியுமாற்றானும் உணரப்படும். அவ்விரண்டினை யும் முறையே கருதுவாம்.

## VII. அத்துவிதப் போத இயைபும் உயிர் வளர்ச்சியும் (Soul evolution)

கஉ. உலக நிகழ்ச்சிகள் யாவும், வேட்கை அறிவு செயல் களினது தொழிற்பாட்டினாலே நிகழ்கின்றன. மக்கள் தங் களுடைய வேட்கை அறிவு செயல்களினது தொழிற் பாட்டினாலேயே மலமறைப்பினின்றும் நீங்கி அன்பும் அறி வும் பெருகப் பெற்றுத் திருந்தி உயிர்வளர்ச்சி (Soul-evolution) அடைகிறார்கள். மக்கள் உயிர்வளர்ச்சி அடைந்து, தன்னிடத்தி லிருந்து நிலையான பேரின்பம் பெறத் தகுதியுடைய வர்களாகும்படியான தொழிலைக் கடவுள் இடையீடின்றிச் செய்து வருகின்றான். இந்தத் தொழில் மறைப்புத் தொழில் என்று கூறப்படும். மேலான அருள்வலியே (பராசத்தியே) மலத்தினிடமாக நின்று தொழில் செய்யுங்கால் மறைப்பு வலி (திரோதான சத்தி)என்று கூறப்படும். இந்த மறைப்புத்தொழில் நடைபெறும் வண்ணம் கடவுள் மாயையினிடமாக உடல் உட் கருவி உலகம் நுகர் பொருள்களை (தனுகரண புவன போகங் களை)ப் படைத்துக் காத்து அழிக்கின்றான். மக்கள் முதலா வது தங்களுக்குக் கடவுள் செய்துவரும் அருட் செயல்களைச் சிறிதும் அறியாது தங்களுடைய வேட்கை அறிவு செயல்கள் கடவுளுடைய வேட்கை அறிவு செயல்களுக்குள் அடங்கி நிக ழும்படிச் செய்யாமல் முறையின்றி ஒழுகுகிறார்கள். அவ்வாறு தங்களுடைய வேட்கை அறிவு செயல்களை முறையின்றி நிகழ்த்துதலினால் தங்களுக்கு வரும் துன்பத்தை அறிந்து உணர்ந்த பொழுது அவர்கள் தாங்கள் அடையும் துன்பத் துக்கு முதலாயிருப்பது தங்களுடைய தீவினை என அறிந்து தீவினையை நீக்கி நல்வினையைச் செய்யத் தொடங்கி அதிலே பழகிப் பழகி நல்வினையையே செய்யும் உள்ளக்கருத்தினை உடையவர்களாகிறார்கள். அவர்கள் இந்த நிலையில் இம்மை

மறுமை நலங்களைக் கருதியே கடவுளது அருளை நினைந்து நெறிக்குட்பட்டு ஒழுகுகிறார்கள். பல பிறவி நிகழ்ச்சிப் பழக்க அறிவின் பயனாக அவர்கள் இந்த நிலையை அடைகிறார்கள். இவ்வாறு கடவுள் மக்களுக்குப் பல பிறவிகளில் அவர்கள் விரும்பிய நுகர்வுப்பொருள்களை நுகர்வித்தும் செய்த நல்வினை தீவினைகளுக்குத் தக்கவாறு இன்பதுன்பங்களை அடைவித்தும் தகுதி உண்டாக்கும் செயல் அவனுடைய அருட்செயலே யாகும்.

## VIII. அத்துவிதப் போது இயையின் மூன்று நிலைகள்

கரு. மேலே கூறியவாறு கடவுள் தனது மறைப்பு வலி யின் (திரோதான சத்தியின்) கூறுகளாகிய நிறைவுவேட்கை அறிவு செயல் வலிகளால் (இச்சாஞானக் கிரியாசத்திகளால்) மக்களுடைய குறைவு வேட்கை அறிவு செயல்களைத் திருத்தித் தகுதி அடையும்படிச் செய்ய அவர்களுடன் கலந்துநின்று ஐந் தொழில் செய்யுங்கால் மூன்று வகை நிலைகளை உடையவனாகின் றான். அவன் தனது வேட்கை வலியால் மக்களுடைய வேட்கை யை இயக்கி நிற்கும் பொழுது "அவைமய (உயிர்களே) யாய்" ஒன்றாய் நிற்கும் நிலையையும், தனது அறிவு வலியால் அவர் களுக்கு அறிவித்து நிற்கும் பொழுது "தானேயாய்" வேறாய் நிற்கும் நிலையையும், தனது செயல் வலியால் நுகர்வுப் பொரு ளிற் கலந்தும் அவர்களை அந்நுகர்வுப் பொருளிற் செலுத்தி யும் நிற்கும் பொழுது "அவையே தானேயாய்" உடனாய் நிற் கும் நிலையையும் உடையவனாகின்றான். இந்த மூன்று நிலைகளில் ஒன்று இல்லாதிருந்தாலும் இரண்டு இல்லனவா யிருந்தாலும் மக்கள் கடவுளால் அடையத்தக்க பயனை அடைய மாட்டார்கள். இந்த மூன்று நிலைகளுங் கூடிய அத்துவிதமே சித்தாந்த சைவர் கூறும் சுத்தாத்துவித மாகும். மேலே ஐந்தாவது பந்தியிற் கூறியபடி அத்துவிதம் என்னும் வடமொழிச் சொல்லுக்கு வடமொழி இலக்கண வழக்கப்படிக் கொள்ளப்படும் 'இருமை அன்மை' என்னும் பொருளும் இந்த மூன்று நிலைகளையுங் குறிக்கின்றது.

(தொடரும்)

# இலக்கணவுரை வழுக்கள்

[திரு. வித்வான் G. தேவநேசன் அவர்கள்]

## 1. ஒற்றளபெடை

"ஙஞணநமன" என்னும் நன்னூற் சூத்திரத்திற்கு,

சூத்திரத்துக் கூறப்பட்ட பத்தொற்றும் ஆய்தம் ஒன்று மாகப் பதினோரெழுத்தும், குறிற்கீழிடை, குறிற்கீழ்க்கடை, குறிலிணைக் கீழிடை, குறிலிணைக் கீழ்க்கடை என்னும் நான் கிடத்தும் அளபெடுக்க ஒற்றளபெடை மொத்தம் நாற்பத்து நான்காம். அவற்றுள் ஆய்தமானது இயல்பீறாக வேனும் விதி யீறாகவேனும் சொல்லுக் கீற்றில் வாராமையால் குறிற் கீழ்க் கடை குறிலிணைக் கீழ்க்கடை என்னும் இரண்டிடத்தையுங் கழிக்க ஒற்றளபெடை நாற்பத்திரண்டாதல் காண்க என்றே முன்னைப்பின்னை உரையாசிரிய ரெல்லாம் உரைத்தார்.

குற்றியலுகரம் குறிற்கீழன்றிக் குறிலிணைக் கீழ் வாரா தென்பது,

"குறியதன் முன்ன ராய்தப் புள்ளி
உயிரொடு புணர்ந்த வல்லாறன் மிசைத்தே"

என்னும் சூத்திரத்தாற் றெளிவாம். அதன் உரையிலும்,

"விலஃஃகி வீங்கிரு ளோட்டுமே மாத
ரிலஃஃகு முத்தி னினம்

என இவ்வாறு குறிலிணைக் கீழும் ஆய்தம் வருமாலோவெனின், அன்ன இயல்பாகவே ஆய்தமாய் நிற்பனவல்ல. ஓசை நிறைத் தற்பொருட்டு ஒற்றில்வழி ஒற்றாக்குதலின், ஈண்டு ஆய்தமும் ஒற்றாய் வருமெனக் கொள்க" என்றார் மயிலைநாதர். ஆகவே குறிலிணைக் கீழ் ஆய்தம் வாராதென்பது பெறப்பட்டது.

இனி, அல்+திணை=அஃறிணை, முள்+தீது=முஃடீது அவ்+கடிய=அஃகடிய என விதியீறாய் ஆய்தம் வருதலின் ஈற்றில் வாராதென்பதும் போலி யுரையென மறுக்கப்படும். ஆகவே ஆய்தம் குறிற்கீழிடை குறிற் கீழ்க்கடை என்னும் ஈரி டத்தும் வந்து அளபெழும் என்றும், குறிலிணைக் கீழிடை

குறிலிணைக் கீழ்க்கடை என்னுமீரிடத்தும் வாராதென்றும், அவ்விரண்டிடத்தையுமே கழிக்க ஒற்றளபெடை மொத்தம் நாற்பத்திரண்டாம் என்றும் கண்டு கொள்க.

## 2. ஏவலொருமை

'நடவாமடிசீ' என்னும் ஏவல்வினைச் சூத்திர உரையில் செய் என்னும் பகுதியொடு ஆய் விகுதி புணர்ந்து செய்யாய் என நின்று, பின்பு அவ்விகுதி கெட்டு மீண்டும் செய் என நிற்பதே ஏவலொருமை யெனச் சிலர் உரைத்தார்.

விகுதி புணர்ந்து கெடுவது இங்கிலீஷ் சமஸ்கிருதம் போன்ற ஆரியமொழிகட்கியல்பேயன்றித் தமிழுக் கியல்பாகாது. Cut, Set என்னும் வினைகள் இறந்த காலத்தில் te விகுதி பெற்றிழந்து மீண்டும் பகுதி யளவாகவே யிருக்கும்.

விகுதி புணர்ந்து கெடுவதாயின், அங்ஙனம் கெடாத சில வினைகளு மிருத்தல்வேண்டும். அங்ஙன மின்மையின் செய் என்னும் வாய்பாடே ஏவலொருமை யென்று துணியப்படும்.

மேலும், செய்யாய் என்பது முன்னிலை எதிர்மறை ஒருமை எதிர்கால வினைமுற்றுச் சொல். அது ஓசை வேறுபாட்டான் வேண்டுகோளாங்கால் செய்யாயா என வினைப்பொருள் பட்டுப் பின்பு அவ்வினாவே செய் என உடன்பாட்டுப் பொருள் தந்து நிற்கும்.

ஏவலொருமை விகுதி புணர்ந்து கெடுவதாயின் ஏவற் பன்மையும் விகுதி புணர்ந்து கெடல் வேண்டும். அங்ஙனம் கெடாமையின், ஒருமை விகுதி மட்டும் புணர்ந்து கெடுமென்றல் பொருந்தாது.

இன்னோரன்ன இடங்களிலெல்லாம் வடமொழியியல் வேறு தென்மொழியியல் வேறு என்பதைத் தெற்றென வுணர்தல் வேண்டும். அங்ஙனம் உணராதாரே,

"செய்என் ஏவல் வினைப்பகாப் பதமே"

என வெள்ளிடையாய் ஆசிரியர் கூறினும் அதனையும் உணராது இவ்வாறு மயங்கக் கூறுவர்.

## 3. தொழிற் பெயர் விகுதி

பாடு என்பது ஒரு தொழிற்பெயர் விகுதி யென்றும் கோட்பாடு என்பது அதற்குதாரண மென்றும் மாணவர்க்குப் பாடமாயுள்ள இலக்கணங்க ளெல்லாம் மயங்கிக் கூறுநிற்கும்.

கோள் என்பது ஒரு முதனிலை திரிந்த தொழிற்பெயர். பின்பு படு என்னும் துணைவினை சேர்ந்து அதுவும் முதனிலை திரிந்து பாடு என்றாயிற்று. பாடு என்பது விகுதியாயின் கோள் என்பது பகுதியாதல் வேண்டும். அங்ஙனமாகாமையின் அஃது துரை யன்மை யறிக. புறப்படு, கடப்படு என்பவை புறப்பாடு கடப்பாடு என்றானாற்போலக் கோட்படு என்பதும் கோட்பாடு என்றாயிற்று.

வாய்பாடு என்பதிலோ வெனின் அதிலும் படு என்னும் துணைவினையே முதனிலை திரிந்ததாதல் வேண்டும்.

## 4. எழுவாயுருபு

"அவற்றுள்,
எழுவாயுருபு திரிபில் பெயரே"

என்னும் சூத்திர வுரையில், தமக்கென வாராய்ச்சி யின்றிச் சுவாமிநாத தேசிகர் போன்ற பிறர் கூற்றுக்களையே கொண்டு கூறும் ஒருசார் ஆசிரியர்,

"எழுவாய் வேற்றுமைக்கு ஐ முதலானவை போன்ற உருபு இல்லாதிருந்தாலும், உரையிற்கோடல் என்கிற உத்தியால் ஆனவன், ஆகின்றவன், ஆவான்; என்றவன், என்கின்றவன், என்பவன்; அவன் முதலாக ஐம்பாலிலும் வருகிற சொல் லுருபுகள் உண்டெனக் கொள்க." என்று வழுப்பட வுரைத்தனர். அவர் தமிழிலக்கணத்தையே அறியார்.

எழுவாய்க்கு இயற்கை வடிவன்றி வேறுருபில்லை யென்று தொல்காப்பியமும் நன்னூலும் துலங்கக் கூறும்.

ஆனவன் முதலிய மூன்றும், என்றவன் முதலிய மூன்றும் முறையே ஆ, (ஆகு) என் என்ற வினைப்பகுதிகளினின்றும் பிறந்த வினையாலணையும் பெயர்கள். வேற்றுமை உருபெல்லாம்

பெயர்க்கு ஈறுயன்றித் தமித்துவாரா இடைச் சொல்லாதலின் தமித்து வருவதும் பெயர்ச்சொல்லா யிருப்பதும், ஐம்பால் காட்டுவதும் அவற்றுக்கு இலக்கண மாகா. ஒரு பெயர்க்கு மற்றொரு பெயர் உருபாய் வருமென்றல் எட்டுணையும் பொருந் தாத தொன்றும்.

கொண்டு, நிமித்தம் முதலிய வினையும் பெயரும் பிற வேற்றுமைகளுக்குச் சொல்லுருபாய் வருமே யெனின், அவை யும் அவ்வவ் வேற்றுமைப் பொருள்பட வருமே யன்றி அவை தாமே வேற்றுமையுருபன்மையும் இடைச்சொல் லாகாமையும் அறிந்து கொள்க.

ஆனவன் முதலிய ஆறு பெயர்களும், சாத்தன், சாத்தி என்ற பெயர்களைப் போலவே ஆனவனை ஆனவனால், ஆனவ னுக்கு என எண் வேற்றுமைப் படுதலின், அவை பெயர்களே யன்றி வேற்றுமை யுருபாகாமை யறிக. பெயருக்கு வேற்றுமை யன்றிவேற்றுமை யுருபிற்கு வேற்றுமை யின்று.

சாத்தன், சாத்தி முதலிய பெயர்கள் மிகக் குறுகி யிருத்த லின், கட்டுரை வகையான் ஓசை நீடற்பொருட்டு சாத்தனான வன், சாத்தியானவள் என்று சிலரால் கூறப்படுவதன்றிப் பிற வேற்றுமை யுருபுகளைப் போல எவ்விடத்தும் எல்லாராலும் கூறப்படுவதல்ல.

ஆகவே முதல் வேற்றுமைக்கு உருபுண்டென்பது போலி யுரையென மறுக்க.

## 5. எழுவாய்ச் சொல்

எழுவாய் பெயர்ச்சொல்லாகவே யிருக்குமென்று இது காறும் எல்லாச் சிற்றிலக்கணங்களுள்ளும் கூறப்பட்டது. அது ஆராய்ச்சியின்றி வழிவழி வந்ததோர் கூற்றும்.

எழுவாய் நிகழ்கால வினையெச்சமாகவும் இருக்கும்.

(உ-ம்.) அவனுக்குப் பாடத் தெரியும்=அவனுக்குப் பாட்டுத் தெரியும்.

பாட என்பது எழுவாய்.

ஆங்கிலத்தில் Infinitive mood (நிகழ்கால வினையெச்சம்) எழுவாயாய் வருதலை ஒப்புநோக்குக. இன்னோரன்ன இடங்களிலெல்லாம் ஒத்துப்பார்வை இலக்கணமே (Comparative Grammar) பயன்படு மென்க.

இனிச் செயப்படுபொருளும் எழுவாய் போல நிகழ்கால வினையெச்சமா யிருக்குமென்றறிக.

(உ - ம்.) அவன் பாடத் தெரிந்து கொண்டான்=அவன் பாட்டைத் தெரிந்து கொண்டான். பாட செயப்படு பொருள்.

## 6. உரிச்சொல் (Poetic Diction)

" உரிச்சொற் கிளவி விரிக்குங் காலை
.........................................
எச்சொல் லாயினும் பொருள்வேறு கிளத்தல் "

என்னும் தொல்காப்பியச் சூத்திரத்திற்குச் சேனாவரையர்

" தமக்கியல்பில்லா விடைச்சொற் போலாது இசை குறிப்புப் பண்பென்னும்' பொருட்குத் தாமே யுரியவாதலின், உரிச்சொல்லாயிற்று. பெரும்பான்மையுஞ் செய்யுட்குரியவாய் வருதலின் உரிச்சொல்லாயிற் றென்பாரு முளர்.

இசை குறிப்புப் பண்பென்னும் பொருளவாய்ப் பெயர் வினை போன்றும் அவற்றிற்கு முதனிலையாயுந் தடுமாறி ஒரு சொல் ஒருபொருட் குரித்தாதலே யன்றி ஒருசொற் பல பொருட்கும் பலசொல் ஒருபொருட்கும் உரியவாய் வருவன உரிச்சொல் லென்றும், அவை பெயரும் வினையும் போல ஈறு பற்றிப் பொருளுணர்த்த லாகாமையின் வெளிப்படாதவற்றை வெளிப்பட்டவற்றோடு சார்த்தித் தம்மை யெடுத்தோதியே அப் பொருளுணர்த்தப்படு மென்றும், உரிச்சொற்குப் பொதுவிலக்கணமும் அவற்றிற்குப் பொருளுணர்த்து முறைமையு முணர்த்தியவாறு.

மெய் தடுமாறலும் ஒருசொற் பலபொருட்குரிமையும் பலசொல் ஒருபொருட்குரிமையும் உரிச்சொற்கு உண்மையான் ஓதினாரேனும், உரிச்சொற்கு இலக்கணமாவது இசை

குறிப்புப் பண்பென்னும் பொருட்குரியவாய் வருதலே யாம்" என்று உரை வரைந்தார்.

நச்சினார்க்கினியரும் இவ்வாறே உரை கூறினர்.

எல்லாச் சொற்களும் பெரும்பாலும் இசை குறிப்புப் பண்பு பற்றியே தோன்றி யிருத்தலின், இசை குறிப்புப் பண்பிற்குரியன உரிச் சொல்லென்பது பொருந்தாது; பொருந்து மாயின் இசை குறிப்புப் பண்புபற்றிய சொற்களெல்லாம் உரிச் சொல்லாதல் வேண்டும். அங்ஙனமாகாமையும், இசையுங் குறிப்பும் பண்பிலடங்குதலும், பண்புப் பெயர் அறுவகைப் பெயருள் ஒன்றாதலும், ஒருசார் தொழிலும் பண்பின்பாற் பாட்டுத் தொழிற் பண்பெனப் படுதலும், வினைச் சொற்களிற் பெரும்பாலன இசையுங் குறிப்பும் பற்றிவருதலும், இலக்கண முணர்ந்தார்க் கெல்லாம் எளிது புலனும்.

மெய்தடுமாறல் சொற்களுக்கெல்லாம் பொதுவியல்பாத லின் அதுவும் ஓர் சிறப்பிலக்கணமன்று.

ஒரு சொற் பலபொருட்குரிமையும் பல சொல் ஒரு பொருட்குரிமையும் பெயர் வினை யிடை யுரி நான்கிற்கும் பொதுவான திரிசொல் இலக்கணமாதலே,

"ஒரு பொருள் குறித்த வேறு சொல்லாகியும்
வேறு பொருள் குறித்த ஒரு சொல்லாகியும்
இருபாற்றென்ப திரிசொற் கிளவி" (தொல். 881.)

என்பதனாற் கண்டு கொள்க.

பெயர்க்கும் வினைக்கும் உரிமை பூண்டு நிற்பன உரிச் சொல்லெனின், இடைச் சொல்லும் அங்ஙனம் உரிமை பூண்டு நிற்றலின் அதுவும் இலக்கணமன்மை யறிக.

இனி, உரிச் சொல் இலக்கணந்தான் என்னையோ வெனிற் கூறுதும்:—

"சொல்லெனப் படுப பெயரே வினையென்
றாயிரண் டென்ப அறிந்திசி னோரே"

என்பதால் இலக்கண வகையிற் சொற்கள் பெயர் வினை என இரண்டே யென்பதும், இடைச் சொல்லாவன அப்பெயரிடை

யும் வினையிடையும் வரும் உறுப்புக்களென்பதும், அவ்வுறுப்புக்களின்றிப் பெயர்ப் பகுபதங்களும் வினைப்பகுபதங்களுமில்லை யென்பதும், தனித்து வரும் இடைச் சொற்களெல்லாம் பெயர் வினை யொன்றனுள் அடங்கு மென்பதும், உரிச்சொல் லென்பதோர் இலக்கணவகைச் சொல்லன் றென்பதும், அது பெயராகவும் வினையாகவு மிருக்குமென்பதும், செய்யுட்குரிய திரிசொற்கட் கெல்லாம் பொருளுணர்த்துவதே உரியியலென் பதும், செய்யுட்குரிய சொற்களே உரிச்சொல் லெனப்பட்டன வென்பதும் அறியப்படும்.

நன்னூலாரும்,

" பல்வகைப் பண்பும் பகர்பெயராகி
ஒருகுணம் பலகுணந் தழுவிப் பெயர்வினை
ஒருவா செய்யுட் குரியன வுரிச்சொல் "                    (நன். 442)

எனத் தெள்ளிதிற் றெரித்தார்.

அதுவுமன்றி.

" இன்ன தின்னுழி இன்னண மியலும்
என்றிசை நூலுட் குணகுணிப் பெயர்கள்
சொல்லாம் பரத்தலிற் பிங்கல முதலாம்
நல்லோருரிச் சொலில் நயந்தனர் கொளலே "                    (நன். 460)

எனவும் புறனடை யோதினர்.

இதில் பிங்கல முதலிய நிகண்டுகளை யெல்லாம் உரிச்சொல்லென்றமையும், அவை செய்யுட்குரிய பலவகை யருஞ்சொற்களுக்கும் பொருள் கூறுதலையும், அவற்றுள் காங்கேயர் நிகண்டு உரிச்சொல்லென்றே பெயர் பெற்றமையும் கண்டு கொள்க. தமிழறிவும் திரிசொல் வழக்கும் மிக்கிருந்த காலத்தில் செய்யுட் சொற்களெல்லாம் இயற்சொற்போல் எளிதாய்ப் பொருள் விளக்குவனவாயின. பின்பு அவை குன்றிய காலத்து அவற்றைத் தனித்தனி அகராதி யியல்பில் எடுத்தோதிப் பொருள்கூற வேண்டியதாயிற்று.

"பெயரும் வினையும்போல ஈறுபற்றிப் பொருளுணர்த்தலாகாமையின், தம்மை யெடுத்தோதியே அப் பொருளுணர்த்தப்

படுதலானும்'' என்றார் சேனாவரையரும். ஒவ்வொரு சொல்லையும் தனித்தனி யெடுத்தோதிப் பொருள் கூறுவதென்றால், அது செய்யுட் சொல்லாய் உலக வழக்கிலில்லாததென்பது எளிதிற் புலனாம். உரிச்சொற்கட் கெல்லாம் பொருள் கூறுவதைத் தொல்காப்பிய உரியியலுட் கண்டுகொள்க. உரியியலென்பதே செய்யுட்குரிய அருஞ்சொற்கட் கெல்லாம் பொருளுணர்த்தும் அகராதித் தொடக்கம். பின்பு அது விரிவான நூலாய் நீண்டு 'நிகண்டு' எனப்பட்டது. நிகள்—நீள். அகலம் நிகளம் என்பதோர் பண்டை வழக்கு. நிகளம்—சங்கிலி, நீளமாயிருப்பது. நிகளம் நீளமென மருவிற்று.

"பொருட்குப் பொருடெரியினது வரம்பின்றே"
"மொழிப்பொருட் காரணம் விழிப்பத்தோன்றா"

எனத் தொல்காப்பியர் உரியியலுட் பொதுப்படக் கூறுவதும் இதனை வலியுறுத்தும்.

பெயரும் வினையுமே முதன்முத லுண்டான சொற்கள். அவற்றினின்றும் பிற்காலத்து இடைச்சொல் வகுக்கப்பட்டது. அதற்கும் பின்பு உரிச்சொற் பாகுபாடுண்டாயிற்று.

---

## * தாயும் சேயுமான அண்ட சராசரம்

[ஸ்ரீமதி ஈ. த. இராஜேசுவரியம்மாள், எம். ஏ.]

இதுகாறும் உலக சரித்திரத்தில் ஒப்பிடற்கரியதான அறிவியற் கல்வி விருத்தியானது அறிவியல் நூல் எல்லையையே மாற்றலாயிற்று. எவ்வெத்துறைகளில் அறிவியற்கல்வி விருத்தியடைந்ததென்பதை ஈண்டுக் கூறாது தற்கால நிலையை மாத்திரம் பொதுவாய் உணர்த்த முயல்வேன். அதாவது அறிவியல் நடை உலகத்தை எவ்வாறு மாற்றிச் சீரான முடிவுக்குக்

* இது லண்டன் நகரத்தில் பிரிடிஷ் அசோசியேஷன் நூற்றாண்டு விழாவில் (British Association Centenary) தலைமை வகித்தபோது ஜெனரல் ஸ்மட்ஸ் என்பார் (General Smuts) செய்த சொற்பொழிவின் சாரம்.

கொண்டுவரப் போகின்ற தென்னும் ஒருவகைப் படக்காட்சியை எனது உள்ளத்தினின்றும் கண்டறியக் கூடியவாறு வெளிப்படுத்துகின்றேன்:—

இயற்கைத் தத்துவ அறிவு சாதாரண அறிவுக்கு எவ்வாறு பேதப்படுகிறதென்று முதலில் ஆராய்வோமாக. இயற்கைத் தத்துவ ஆராய்ச்சி ஆரம்பித்த நாள்முதல் இதுவரையிலும் முடிவுக்கு வந்த பற்பல விஷயங்களைத் தொகுத்து வைப்போமாயின், இனி உலக அறிவு எவ்வாறு இனிது முடிந்து ஒரு நிலையில் நிற்கும் என்பது காணக் கூடியதோர் விந்தையான ஓவியமாம். ஒவ்வொரு துறையிலும் யுக்தி அநுபவங்களால் ஆராய்ந்து தேறப்பட்ட விஷயங்கள் மேற்கண்ட ஓவியத்தின் ஒவ்வொரு பாகமாகும். ஒன்றும் தன்னுடன் முடிவாகாது பிறவற்றைத் தழுவி ஒரு தேகத்துக்குள்ள பல உறுப்புக்கள் போல் அவை அமைந்து விளங்கும். ஆயினும் எந்த உறுப்பும் பூரண வளர்ச்சியைத் தற்காலத்தில் அடையவில்லை.

*  *  *

ஆகையால், அறிவின் பூரண முதிர்ச்சியில் உலகம் எவ்வாறு விளங்குமென்பதைச் செவ்வனே அனுமானத்தால் அறிதலரிதாயினும், உலகத்தின் முற்சரித்திரங் கொண்டும், தற்கால அறிவு வளர்ச்சியின் நோக்கத்தைக் கண்டும் ஒருவிதமாகக் குறிப்பிடலாமன்றோ? மனிதனுடைய நம்பிக்கையும் அறிவும் மாறமாற உலகம் எவ்வாறு மாறிக்கொண்டு வருகிறது என்பதை நோக்குவோம். இயற்கையில் யாவையும் சாலமாகவும், உயிர்களாகவும், காணப்பட்ட தோற்றத்தினின்று பற்பல கடவுள்கள் உற்பத்தியானதை உணர்கின்றோம். சாதாரண அறிவு கொண்ட உலகம் யந்திர உருவம் பெற்றதைக் கலிலியோ (Galileo) நியூடன் (Newton) முதலானோர் காலத்தில் கண்டோம். ஈன்ஸ்டீன் (Einstein) காலத்தில் அதன் கட்டிடமே மிகவும் சிக்கான கணித ரூபமாய் அதற்கு ஒப்பிடத்தக்க யந்திரம் யாதொன்றுமில்லாமற் போயிற்று. இவ்வித உலகத் தோற்றமானது உலகத்தார் அறிவு வளர வளர ஒரு பெரிய

ஜீவரூபமாகவும், அதன் அவயவங்கள் அதன் இயற்கைப் பொருள்களாகவும் தோற்று நிற்கும்.

* * *

அறிவியல் நூல் முதல் முதல் உலோகாயதமாகவே நின்றது. அதனால் ஜடபதார்த்தமானது வன்மையுடன் முன் நின்று அனுபவத்திற்கும் யுக்திக்கும் தக்க காட்சியா யிருந்தது. காகதாலிய நியாயமே அதன் தர்க்கமாகவு மிருந்தது. பிறகு அணுக்களின் தன்மை நிலைபெறவும் ஆகாயவெளி காலத்துடன் கலந்து நிற்கவும் இயற்கைச் சக்திகள் என்னும் பாவனைகள் ஏற்பட்டன. இயற்கையில் ஒருபடித்தாய தன்மை ஏற்பாடு செய்யப்பட்டது. ஒட்டம் பதனமழியாது வைக்க மின்சார காந்தம் முதலிய சட்டங்கள் விவரிக்கலாயின. இயற்கையானது இயந்திர ஒழுங்கில் அடக்கப்பட்ட ஒருவகைக் கட்டிடமாகி, அதற்கு ஒருவகைத் தொழிலும் தீர்மானிக்கப்பட்டது. இத்தகைய கட்டிடத்தில் ஜீவன் மனம் என்பன நுழைய இடமுமில்லை; இயற்கைக்கு அதிதமானதை நம்பினருமில்லை.

* * *

இவ்வாறு 19-ஆம் நூற்றூண்டில் சாதாரண விவேகமானது ஸ்புடமாகி நமது நாகரிகத்தில் பல கருவிகளை உற்பத்தி செய்வதில் பயன்பட்டது. ஆயினும் இவ்வாறு ஜடபதார்த்தத்தில் இலயமான 19-ம் நூற்றூண்டின் அறிவு பின்வரும் நூற்றூண்டின் தன்மைகளைச் சூல்கொண்டு விளங்கிற்று. ஸ்தூல அணுக்களும் சூக்கும அணுக்களும் காரண அணுக்களில் செல்லலாயின. ஜடபதார்த்தமே ஒருவகைச் சக்தி யென்றும் யாவும் ஒருவகை மின்சார சக்தி எனவும் வெளியிடலாய் பஞ்ச பூதங்களும் சக்தி சொரூபத்தில் அடங்குவதைத் தாம்சன் (Thomson), இரத்தர்போர்ட் (Rutherford) முதலானோர் நிரூபித்தனர். மின்சாரக் காந்த மண்டலத்தில் பாரடே (Faraday) என்பவர் செய்த ஆராய்ச்சிகளை கிளார்க்கு மாக்ஸ்வெல் (Clark Maxwell) விருத்தி செய்ததுமன்றி, அவ்வாராய்ச்சியானது காலதிசை சையோகத்தைக் காட்டி அவை வெவ்வேறு அல்ல என்பதை

யும் நிரூபிக்கலாயிற்று. ஆகையால் பழைய உலகமானது கோபர்னிகஸ் (Copernicus) காலத்திலிருந்த வானசாஸ்திரத்தால் தலைகீழாய் மாறி, நியூடன் (Newton) முதலானோர் புதிய வழியைக் காட்டியது போலவே, காலதிசைப் பரிமாணம் முற்கால மார்திரி அளவைகள் பெருது இரண்டும் ஒன்றை ஒன்று விடாதிருப்பதையும், ஒன்ருல் ஒன்று மாறும் கணித இலக்கணத்தைப் பெற்றிருப்பதையும், ஈன்ஸ்டீன், (Einstein) நிரூபித்தார்.

*　　*　　*

இயற்கைத் தத்துவ நூல் இக்காலத்தில் புதிய பாடத்தை ஆரம்பிக்கலாயிற்று. தொகைச் சக்திகள் (Quantum of Energy) பரிமாணத்தையும், அவற்றின் ஆற்றலையும் மாக்ஸ் பிளான்க் (Max Planck) என்பார் கண்டு பிடித்தார். பெரிய ஸ்தலத்தில் இடம் போதாத ஒன்று அணுவுக்குள் அடங்கக் கூடியது என்பது விந்தையன்ருே? பூதக்கண்ணுடிக்கு அதீதமான வஸ்துக்களும், அவற்றின் தரங்கங்களும், நாம் கண்டு கணிக்கக்கூடிய நிலைக்கு வந்துவிட்டன. சென்ற நூற்ருண்டில் நாம் கற்ற பாடத்தை எல்லாத் துறைகளிலும் மறக்க வேண்டியதா யிருக்கிறது. நூதனமாய் ஆங்காங்கு கண்டு பிடித்த விஷயங்களெல்லாம், அறிவியல் நூலை முற்றும் மாற்றிவிட்டனவன்ருே?

*　　*　　*

இனி இயற்கைத் தத்துவ சாஸ்திரத்தை விட்டு, ஜீவராசிகளின் தேகதத்துவ சாஸ்திரத்தைக் (Biological Science) கவனிப்போமானுல் அதில் மிகவும் ஆச்சரியமான விருத்தி அடைந்திருக்கின்ருேம். மனித உற்பத்திக்கு முன்னிருந்த தத்துவங்களிலிருந்து மனித உற்பத்தியைக் காண்போமாயின் ஒவ்வொரு மதமும் முன் எழுதிய உற்பத்திப் பிரகாணத்தை மாற்ற வேண்டியதா யிருக்கிறது. சிருஷ்டி முறையே வேருகக் காணப்படுகிறது. இவ்வாறு மனிதன் ஜீவராசியில் வளர, வளர, எவ்வாறு மாறிக்கொண்டு வந்தான் என்பதைப் பூமியில் வெட்டியெடுக்கப்படும் பல்லாயிர வருடங்கட்கு முந்திய ஹஸ்திகளால்

(Fossils) நிரூபிக்கலாம். உடைந்ததையும் சேர்ந்ததையும் கணக்கெடுப்போமாயின் அக்கணக்கின் வண்ணமே மறுபடியும் வளர்ச்சி, உற்பத்தி, விருத்தி முதலியன நடக்குமா என்பது கணிதத்தில் நிரூபிக்க முடியாத காரியமன்றோ?

* * *

இவை யாவையும் நாம் உற்று நோக்கின் நமது வாழ்வானது பிரிக்கக்கூடாத பல அம்சங்களின் சையோகமாகவுங் காணப்படுகிறது. ஆயினும் அதைக் கூட்டல் வகையில் நிரூபிக்கக் கூடாமையானது கூட்டத்தில் நிற்கும் ஒவ்வொன்றும், தனித்தனி நின்ற காலத்தில் அக்குணங்கள் பெருமையால் விளங்கும். தற்கால இயற்கைத் தத்துவ ஆராய்ச்சிகள் தேக தத்துவ பௌதிகங்களுக்கு மிகச் சமீபத்தில் நெருக்குவதை உணர்கின்றோம். குவாண்டம்தியரி (Quantum Theory) என்னும் தொகுப்பாவனையும், கால இட சையோக பந்தமும், உயிருக்குள்ள தத்துவங்களுக்குள் இயற்கைத் தத்துவ நூலை அடக்க வலிக்கின்றன; இவை, ஜடபதார்த்தங்கள் யந்திர சக்தி போல் ஒன்றை ஒன்று அவாவுதலும், அத்தத்துவத்தை விட்டுப் புதிதான பூத தத்துவத்திற்கும் ஜீவதேக நிலைமைக்கும் உள்ள சம்பந்தங்களுள் நிலை நிறுத்துவதுமான கொள்கையில் முடியும்.

* * *

இப்போது உலோகாயத மதமானது முற்றும் இறந்ததே என்று கொள்ளல் வேண்டும். எதை எடுத்த போதிலும் அது ஜீவ உற்பத்தி வளர்ச்சி (Evolution) உவமானத்தில் காட்டக் கூடியதா யிருக்கின்றதே யன்றிக் கல் மண்ணைப்போல் உயிரற்ற வகையில் காணக் கூடியதாயில்லை. கல்லும் மண்ணும் ஜீவ நிலையில் தாழ்ந்த பாவனையாகக் காணக்கூடியனவா யிருக்கின்றனவே யன்றி, பிராண சம்பந்தமற்ற சுத்த ஜடமாய் யாதும் காணப்படவில்லை. ஆகையால் ஜடமானது சித்தின் சம்பந்தத்துடனே எங்கும் விளங்குமேயன்றித் தனித்திருப்பதை நூதன அறிவியல் நூலில் காணக்கூடாமையாய் இருக்கின்றது; எனினும் அறிவியல் நூல் தன்னுடைய சுயார்ஜ்ஜிதத்தை விட்டுப் போக

வில்லை. அதன் தற்கால நிலைமையே அதன் சுயார்ஜ்ஜிதத்தை அதன் பிதுரார்ஜ்ஜிதத்துடன் அநுபவிக்கக் கொண்டு வருகின்றது என்னலாம்.

*        *        *

டார்வின் (Darwin) ஜீவயியலானது ஒவ்வொரு பொருளுக்கும், ஒவ்வொரு தத்துவத்துக்கும், ஒவ்வொரு நிலைமைக்கும், ஒவ்வொரு விருத்திக்கும், ஒவ்வொரு நாகரிகத்திற்கும் அடிப்படையாய் நிற்பதுபோல், கணித சாஸ்திரம் முதலிய அறிவுக்கு அதிநுட்பமான தத்துவங்களையும் விளக்கப் பயன் படுகின்றன. அணுவுக்கணுவிலும் மகத்துக்கு மகத்திலும் உள்ள சட்ட திட்டங்களை இதுவே தர்க்க ஒழுங்கில் காட்டக் கூடியதா யிருக்கின்றது. இதுவே நீதி நூலுக்கும் பயன்படுகின்றது. வேத நூலுக்கும் பயன்படுகின்றது. காலதிசை வர்த்தமானங்களை விளக்கவும் இது ஒரு கருவியாக இருக்கின்றது. மனதின் உற்பத்தி வளர்ச்சி விருத்தியைக் காட்டும் மனோ சாஸ்திரத்திற்கு இதுவே அடிப்படை என்னலாம். சென்ற நூற்றாண்டில் ஹக்ஸ்லி (Huxley) முதலானோர் மதத்திற்கும் இயற்கைத் தத்துவத்திற்கும் ஏற்படுத்திய தீராப் பகையைத் தீர்த்ததும் இதுவேயாம்.

*        *        *

இதன்றியும் மனமானது உலகத்தையும் அண்ட சராசரங்களையும் ஆள சக்தி தந்ததும் இதுவேயாம். இதனால் கவி பிரௌனிங் (Poet Browning) சென்ற நூற்றாண்டில் பாடியவாறு "மனிதன் பேய்த்தனமென்று நிவர்த்தித்த யாவும் பேய்த்தனமன்று, அதுவே கடவுளுக்கு விலை யுயர்ந்த காணிக்கையாம்.

"All I could never be
All man ignored in me
This I was worth to God"

என்பதின் உண்மை இப்பொழுது நன்கு விளங்கும்.

*        *        *

அண்ட சராசரங்கள் முற்றும் தாயும் சேயுமாய் விளங்கு

வதைப் பற்பல கலைகள் மூலமாகக் காண்கின்றோம். அறிவியல் நூல் ஒவ்வொரு தேசத்திலும் ஒவ்வொரு மதத்திலுமுள்ள முன்னோர்களின் அரும்பொருள்களான வைதீகத் தன்மையாய் விளங்கிய பிதிரார்ஜ்ஜிதங்களைப் பலவாறு பாழ்படுத்தி யிருப்பினும், அவற்றை யெல்லாம் ஒருங்கு சேர்த்து நூதன அறிவுடன் சம்பந்தப்படுத்த அதுவே புதிய கட்டிடமாய் எல்லாவற்றிற்கும் பிராணாதாரமான ஒருவகை தேக யந்திரமாய் விளங்கும். அதனால் பயனற்ற துரும்புகள் யாவும் தமக்குத் தக்க தலங்களில் நிற்க, யாவும் கிரமமாய்க் கூட்டப்பட்டு, ஒவ்வொன்றும் பயனாய், இன்பமயமாய், இயற்கை முடிவில் நிற்கும் என்பதும், அவை இத்தகையன வென்று எண்ணிக் கூறுவது மனோவாக்குக்கு அதீதப்படினும், யாதொரு தோஷமில்லாமல் நிரந்தரமாய், அமலமாய், மிகப் பெரியவாய் நிற்பது அற்புத மென்பதும், இக்காலத்திய அறிவியல் காட்டும் தோற்றங்களாம். இத் தோற்றத்தை முற்றும் செவ்வனே விடாது காட்டுதல் அரிதாயினும் இதை ஒரு வகையில் வெளிப் பார்வையிலாகினும் நாம் காணலாகும்.

—“சித்தாந்தம்.”

---

# * மொழி முதற்றமிழர் கடவுட்கொள்கை

[திரு. பா. வே. மாணிக்க நாயக்கர் அறிவுரை.]

பண்டைக் காலத்துத் தமிழர் கொண்டிருந்த கடவுட் கொள்கை இன்னதென்று உணர இயலுமோ, இயலினும் அது இப்போதைய தமிழருக்கு யாது பயன்தரும், என்கிற இயற்கை வினாக்கள் கிளம்புமாயினும், என்னுடைய தமிழ் மொழி ஆராய்ச்சி சென்ற அளவில் தமிழ்மொழியை ஆக்கி வைத்துச்

* இஃது சென்னைத் திருமயிலை சன்மார்க்க சகோதரத்துவ சங்கத்தின் நான்காவது ஆண்டு நிறைவு விழாவில் திரு. பா. வே. மாணிக்க நாயக்கரவர்களால் குறிப்புத் தரப்பெற்று அவருடைய திருவளர் செல்வி பா. குணமாணிக்கம் பி. ஏ., அவர்களால் எடுத்தோதப் பெற்றது.

சென்ற 'மொழி முதற்றமிழர்' தங்கள் 'கடவுட் கொள்கை' யாதேயாயினும் அதனைத் தங்கள் கருத்தில் வைத்தோ அல்லது சுவடிகளில் எழுதி வைத்தோ, கழிந்தேகாமல், நம் தமிழ் மொழியின் அமைப்பே கடவுட் கொள்கை என்பதாகவும், கடவுட் கொள்கை தமிழ் மொழியின் அமைப்பு என்பதாகவும், மொழியை ஆக்கி வைத்து, அம்மொழி அப்போது ஆக்கி வைத்த அமைப்பு இப்போதும் குலையாமல் நாம் வழங்கி வருவதனாலே, யாதாமொருவர் தமிழ் பேசுவதில் அம்மொழியிலமைந்துள்ள கடவுட் கொள்கைக்கு முரணாகத் தன் கடவுட் கொள்கையைச் சொல்லுவாரானால் அவர் பேச்சொன்றும் பொருளொன்றுமாக ஒன்றற்கொன்று பொருத்தமில்லாததாய் விடுகிறபடியால், தமிழ்மொழியைத் தவறின்றி வழங்குவதற்கே அம்மொழியிலமைந்து கிடக்கிற கடவுட் கொள்கையை உற்றுணர வேண்டியது இன்றியமையாததாகின்றது.

வேறெம் மொழிகளிலும் இலக்கணச் சொற்களில் வவ்வல் என்பது வொகலிஸ்லத்தீன் அதாவது குரலோசை என்னும் பொருளது. தமிழிலோ அதற்கு நேரான சொல் உயிர் என்பது. 'வவ்வல்' என்னும் சொல் மொழிபற்றிய சொல்லென்றும் உயிர் என்னும் சொல் உண்மையியற்சொல் என்பதும் ஒப்புவீர்கள். அப்படியே கான்ஸோனன்ட் என்பது உடனொலிப்பது என்னும் பொருளது. இதற்கு நேரான தமிழிலக்கணச் சொற்கள் மெய் அல்லது உடல். இங்கும் கான்ஸொனன்ட் என்பது மொழிபற்றிய சொல்லென்றும், 'மெய்' அல்லது 'உடல்' என்பது உண்மையியற்சொல் என்றும் ஒப்புவீர்கள்.

'அஸ்பரேட்' என்பது லத்தீன் ஸ்பிரேர் - டு பிரீத் அதாவது மூச்சு விடுவது என்னும் பொருளது; அதைப் போலவே விசர்க்கம் என்னும் ஆரியச் சொல்லும் அதே பொருளது; இவைகளுக்கு நேரான தமிழ்ச் சொல்லோ 'ஆய்தம்' என்பது. அது ஆய் என்னும் முதனிலை கொண்ட உண்மையியற்சொல்; திருத்துவது, துலக்குவது, புலப்படுத்துவது, நுண் நுழைவுடையது முதலாகியவைகளைக் குறிப்பது.

ஆங்கில இலக்கணச் சொல்லாகிய வெர்ப் என்பது லத்தீன் வெர்பம் ஒரு சொல் ஒருகுறிப்பும் காட்டாத சொல் என்னும் பொருளது. அதற்கு நேரான தமிழிலக்கணச் சொல் வினை என்பது, அதாவது ஆரியத்தில் கர்மம் என்னும் சொல்லிற்கு நேரானது; ஆதலின் வினை என்பதும் உண்மையியற் சொல் என்று ஒப்புவீர்களென்று நம்புகிறேன். இப்படியே தமிழிலக்கணத்தில் உடம்படுமெய் என்றாகும் நின்ற சொல்லின் ஈற்றெழுத்தும் வரும் சொல்லின் முதலெழுத்தும் இணையும்போது நேரும் எழுத்தோசை மாறுதலைக் குறிப்பது.

இம்மாதிரியாக தமிழிலக்கணம் முழுமையும் துருவிப் பார்க்கில் இலக்கணச் சொற்கள் ஒவ்வொன்றும் உண்மையியற் சொற்களாகவே இருத்தல் கண்கூடாகும்.

இம்மாதிரி வேறு மொழியாளர்களைப் போலல்லாது, ‘மொழி முதற்றமிழர்’ தங்கள் இலக்கணச் சொற்கள் முழுமையும் உண்மையியற் சொற்களாகவே கொண்டவர்கள். பொது உண்மையியலும், மொழி யுண்மையியலும், இழையேனும் பிறழாத ஒருவகையினவே என்கிற முற்றத்தீர்ந்த கொள்கையினரா யிருந்து அவர் தம் மொழியை ஆக்கியிருத்தல் வேண்டுமன்றோ ?

எம் மதத்தினரும், இயற்கையில் உயிர், உடல், கடவுள் என்கிற முப்பொருள்கள் உண்டென்றும் இல்லையென்றும் உண்டோ இல்லையோ என்றும் வழக்குரைப்பதும் நிலை நாட்டுவதும், மறுப்பதும் கண்டிருக்கிறோம்.

இலக்கணச் சொற்களே உயிர், உடல், வினை, தன்வினை, பிறவினை, முன்வினை, (இறந்த காலவினை, பிராரத்வம்) பின்வினை (எதிர் காலவினை, சஞ்சிதம்) என்று ஆண்ட மொழி முதற்றமிழர் கடவுட் கொள்கையைத் தமிழ் மொழியின் அமைப்பில் எவ்வாறு வைத்தனரென்பது ஆராயத் தக்கதன்றோ ?

மொழியில், தக்க சொற்களைத் தக்கபடி ஆராய்வதற்குச் சூத்திரங்கள் செய்வதில் உலகிலுள்ள பொருள்கள், அவைகளின் பெயர்கள் எல்லாம் வகைப் படுத்திச் சொல்ல கடமைப்

பட்டு "திணை" என்று எடுத்து, உயர்திணை, அஃறிணை என்று இருவகையாகப் பிரித்து விவரம் கண்டு வைத்தார்கள்.
அது வருமாறு:—

தொல்காப்பியம் சொல்லதிகாரம் முதற் சூத்திரம்:—

"உயர்திணை யென்மனார் மக்கட் சுட்டே—அஃறிணை யென்மனார் அவரல பிறவே—ஆயிருதிணையின் இயங்குவன சொல்லே" இதுவே பழந்தமிழர், அதாவது "மொழி முதற்றமிழர்" தந்த இலக்கணம்.

இதில் மக்களாகச் சுட்டத்தகுவனவே உயர்திணை யென்றும், பிரிநிலையேகாரம் கொடுத்து வேறொன்றும் உயர்திணையல்லவென்றும் குறிப்பாற் காட்டியதும் போதாமல், மக்களாகச் சுட்டத்தகாத மற்றெல்லாம் உயர்திணையல்லாத திணையென்று சொன்னதும் போதாமல் வேறு இவ்விரண்டற்கும் இடைப்பட்ட புறப்பட்ட திணைகள் இருக்குமோ என்று எண்ண இடமும் விடாமல் அவ்விரண்டு திணைவகையிலே தான் மொழி இயங்குமெனவும் சொல்லிப் போந்தனர்.

அவ்வாறு சொல்லியதிலும் மக்கள் தான் உயர்திணை என்றும் சொல்லாமல், மக்களாகச் சுட்டத்தகுவனதான் உயர்திணை என்றதனாலே வாலின்றி இரண்டு கால்கள், இரண்டு கைகள் இருந்து, நிமிர்ந்து நிற்கும், பேசும், சிரிக்கும், ஓலமிடும் பண்பும் இருந்தால், "மென்" என்று பிறமக்கள் ஒருவனைக் கருதுவார்கள்; அத்தகைய உறுப்பமைதிப் பண்பு வாய்ந்த மற்ற வகுப்பினரால் 'மென்' எனப்படுவோர் எல்லோரும் உயர்திணையினரல்லர் என்பது காட்டவும், நாலு கால், நீண்ட வால் இருந்தாலும் விலங்கென்று பிறவகுப்பினரால் சொல்லப்படுவனவும், மக்களாகச் சுட்டத்தகும் குணங்கள் பெற்றிருக்குமானல் அவைகள் உயர்திணையினவே என்பதும் ஊன்றப் பலப்படுத்தவே, மக்களாகச் சுட்டத் தகுவனவே உயர்திணை என்றனர். இப்போதைய தமிழ்மொழி வழக்கிலும் சான்று காட்டுதும்:—

இராமனென்று பெயருடைய வேலையாளொருவனை, நீங்கள் விளித்து அந்த விளக்கை எடுத்துவா என்று கட்டளையிட

அவன் எடுத்து வரும்போது போட்டுடைத்தானனால் "இந்தக் கழுதை இராமன் முட்டாள் விளக்கைப் போட்டுடைத்தது," என்று அவன் மக்களுருவினனானும் மக்களாகச் சுட்டத் தகும் குணம் இழந்தானனபடியாலே அவனே அஃறிணையின் பாற்படுத்தி மொழிகின்றீர்களன்றோ? அதற்கு மாறாக, நுங்கள் நன்றி யறிதலும் நல்லறிவு முடைய நாய் ஓர் குழந்தை தவறிக் குளத்தில் விழுந்தவுடனே, தானும் உடனே குளத்தில் குதித்து அந்தக் குழந்தை இறவாதபடித் தன் வாயாற் கௌவிக் கரை சேர்த்தின உடனே, நாலு காலும் வாலும் அந்த நாய்க்கு இருந் தாலும், அதனை "அடே கண்மணி வாடா, கட்டித் தங்கமே வாடா, குழந்தை உயிரைக் காப்பாற்றிய கடவுளே வாடா" என்று நாயை உயர்திணையின் பாற்படுத்தி, எடுத்து அணைத்து முத்தங் கொடுத்து, உயர்திணைக்குரிய உரிமை கடமை யாவற் றையும் செய்கிறீர்களல்லவோ! அந்நாய் மக்களாகச் சுட்டத் தகுந்தன்மையைக் காட்டினமையின் தொல்காப்பிய இலக்கணப் படி உயர்திணையின் பாற்படுத்திப் பேசுகிறீர்கள்.

ஆகையால், மொழி முதற்றமிழர் உருவைப் பொருட்படுத் தாமல் குணத்தையே பொருத்தித் திணை வகுத்தனர். இற்றைக் கும் நாம் தமிழ் வழங்குவதில் தொல்காப்பிய வகுப்பைத்தான் வழிவழிவந்த பழக்கத்தினலே வழங்கி வருகிறோம்.

பிற்காலத்தில் ஆரிய நாற்றம், தமிழ் நாட்டில் பரவின பின், ஆரியத்தை முகர்ந்த குற்றத்தால் பவணந்தி முனிவர் எழுதிவைத்த நன்னூல் என்று தமிழைக் கெடுக்கவந்த தீ நூலில் திணையை விரித்திருப்பது, சூத்திரம்:

"மக்கள் தேவர் நரகர் உயர்திணை
மற்றுயிருள்ளவு மில்லவு மஃறிணை"

இதில் குணம் பற்றி ஒன்றும் எடுக்காமல், உருவத்தால் மக்க ளும், தேவரும், மிகவும் தாழ்ந்த நரகரும்கூட உயர்திணையாம். வேறு உயிரிருந்தாலும் இல்லாவிட்டாலும் மற்றவைகளெல்லாம் அஃறிணையாம். இவர் இம்மாதிரி தமிழிலக்கண மென்று

எழுதினாராலும், இவர் காலத்திலும் இப்போதும் தொல் காப்பியத் திணை இலக்கணமே வழங்கி வந்திருக்கிறது.

இனி மொழி முதற்றமிழர் கடவுளை எந்தத் திணையின் பாற்படுத்தினர்களென்பதை ஆராய்ந்தால் அவர்கள் கொண்டிருந்த கடவுட் கொள்கை இன்னதென்பதும், தமிழ் மொழியின் உறுப்பாக அமைந்து கிடக்கும் கடவுட் கொள்கை இன்னதென்பதும் அறியப்படும்.

பின்வந்த பவணந்தி முனிவர் இலக்கணப்படி தேவர் உயர்திணை; அதாவது ஆரிய நாற்றம் தமிழ் நாட்டிற் பரவிய மேல் தேவர் உயர்திணை. தொல்காப்பிய இலக்கணப்படி மக்களாகச் சுட்டத் தகுவனவன்றி மற்றெல்லாம் அஃறிணை; அதன் படி கடவுளும் அதாவது தெய்வமும் மக்களாகச் சுட்டத்தகும் குணம் வாய்ந்தால் உயர்திணை அன்றேல் அஃறிணையென்று கூர்ந்தறியக் கிடக்கின்றது.

ஆனால் நேர் உரையின்றிக் கூர்த்தறிவதில் பிழைபட இடமுண்டு. மொழி முதற்றமிழர் அதற்கும் இடம் விடாமல் தொல் காப்பியம், சொல்லதிகாரம் சூத்திரம் “பெண்மை சுட்டிய உயர் திணை, மருங்கின் ஆண்மை திரிந்த பெயர் நிலைக் கிளவியும், தெய்வஞ்சுட்டிய பெயர் நிலைக் கிளவியும், இவ்வென வறியும் மந்தம் தமக்கிலவே, உயர்திணை மருங்கின்பால் பிரிந்திசைக்கும்”. இந்த சூத்திரத்தில் பேடி என்னும் சொல் போன்றவைகளை வழங்க இலக்கணம் முதலிரண்டு வரிகளில் சொல்லிப் பின்,

தெய்வஞ் சுட்டிய பெயர் நிலைக்கிளவி அதாவது, தெய்வப் பெயர்ச் சொல்லிற்கு, இன்ன திணைக்குரிய சொல்லென்று அறிதற்குரிய விகுதி அதாவது இறுதி அதற்குச் சொந்தமாகக் கிடையாது.

யாதாமொரு தெய்வம் மக்களாகச் சுட்டத் தகும் குணம் வாய்ந்ததை மொழி வழங்கும் தமிழ் மக்கள் விரும்பி அத்தெய்வப்பெயரை உயர்திணைப் பாற்படுத்தி மொழிவாரானல் அப்போது அத்தெய்வப் பெயர் ஆண்பால், பலர்பால் என்ற பால் விகுதி பெறும் என்றனர்.

எடுத்துக் காட்டாக:—"நாசமாய்ப் போன அந்தக் காளி வந்து சாணுங்குப்பத்தில் புகுந்தது; எத்தனை பேரை அடித்துக்கொண்டு போய்விட்டது!" இங்கே தெய்வம் மக்களாகச் சுட்டத்தகும் தன்மை காட்டாதபடியால், தமிழ் வழங்குவோர் தொல்காப்பிய இலக்கணம் பிழைபாமல் அத்தெய்வத்தை அஃறிணையிலிட்டுக் கூறுவர்.

"மக்கள் தாமே ஆறறிவுயிரே"
"உயர்திணை யென்மனார் மக்கட்சுட்டே"

என்று மொழிமுதற் றமிழர் மொழிந்தது மன்றி இக்கொள்கையைப் பிரிக்க வியலாதபடி பிணைத்தே தம் தமிழ்மொழியமைப்பை நிறுவினரென்றால், அவர்களுக்குத் தெய்வத்தினிடத்தில் நம்பிக்கை யுண்டா ? நம்பிக்கை யின்றேல்:—

தொல்காப்பியம் பொருளதிகாரத்தில்,

"மாயோன் மேய காடுறை யுலகமும்
சேயோன்மேய மைவரை யுலகமும்
வேந்தன் மேய தீம்புன லுலகமும்
வருணன் மேய பெருமண லுலகமும்
முல்லை குறிஞ்சி மருத நெய்தலெனச்
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே"

என்றது போன்ற பல சூத்திரங்களில் தெய்வப் பெயர்களை வழங்கியிருப்பதில் மொழி முதற்றமிழர் தெய்வப் பற்று உடையவர்களென்று முன்னுக்குப்பின் முரண்படுகின்றதென ஐயுற இடமுண்டானும் இவ்வாறில்லை என்பது தமிழ்மொழி ஆராய்ச்சிப் பலப்படுத்துகின்றது. ஆனால் அவ்விவரங்களை விரித்துரைக்க இவ்வரை மணிநேரத்தில் இடமில்லை. சுருக்கமாகச் சொல்லுமிடத்துத் தொல்காப்பியம் புறத்திணையியல்,

"கொடிநிலை கந்தழி வள்ளி என்ற
வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்
கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே"

என்ற சூத்திரத்தில் குறித்த உருவின்றிய முப்பொருள்களே முதற்பொருள்களென்றும், உருவத் தெய்வங்களெல்லாம்

ஒவ்வொரு பான்மையின் சிறப்புத் தன்மைகளை தமிழர் உருவ கப் படுத்தித் தெய்வமென்று பெயர் வைத்து வழிபாடு செய்து வந்தனரன்றி கல்லுருவங்களை மண்ணுருவங்களை வழிபாடு செய்யவில்லை என்பது ஆராய்ச்சியில் பல சான்றுகளாலும் ஐய மறத் தோன்றுகிறது.

---

ஸ்ரீவைகுண்டம்

திருவாளர் S. T. பொன்னம்பலநாத முதலியார்

## அறுபதாவது ஆண்டு நிறைவு விழா

1932-ம் ஆண்டு ஜனவரித் திங்கள் 20-ம் நாள் புதன் கிழமையன்று திருவாளர் S. T. பொன்னம்பலநாத முதலியாரவர்களின் அறுபதாவது ஆண்டு நிறைவு விழா ஸ்ரீவைகுண்டத்திலும், சென்னை, திருக்கழுக்குன்றம், திருவொற்றியூர் முதலிய இடங்களிலும் மிகவும் சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது.

ஸ்ரீவைகுண்டத்தில் சிவபெருமான் திருக்கோயிலில் அம்மை அப்பரை எழுந்தருளச் செய்தும், பெருமாள் கோயிலில் பெருமாளை எழுந்தருளச் செய்தும் பெருஞ்சிறப்பாக நடத்துவிக்கப்பெற்றது. அன்று சிவன் கோயிலில் சுமார் முந்நூறு சுமார்த்தப் பார்ப்பனர்கட்கும் பெருமாள் கோயிலில் சுமார் முந்நூறு ஐயங்கார்கட்கும், மசூதியில் சுமார் இருநூற்றைம்பது மகமதியர்கட்கும், திரு. முதலியாரவர்கள் இல்லத்தில், சாதிபேதமின்றிச் சுமார் இரண்டாயிரம் மக்கட்கும் உணவு அளிக்கப்பட்டது.

திருக்கழுக்குன்றம், திருவொற்றியூர், சென்னைக் கந்தசாமி முதலிய திருக்கோயில்களில் ஸ்ரீமத் கருணானந்த சுவாமிகளால் பெருஞ் சிறப்புடன் வழிபாடு நடத்தப்பட்டது. மேலும் 20-1-32 முதல் 23-1-32 வரை நாடோறும் நூற்றுக்குக் குறையாத அடியவர்களுக்கு அறுசுவையுடன் உணவும் நானூறுக்குக் குறையாத ஏழைகட்கு வயிறார உணவும் அளிக்கப்பட்டன.

மேலும் பாளையங்கோட்டையில் குருடு, செவிடு ஊமைப் பள்ளிக்கூடங்களிலுள்ள பிள்ளைகட்கு ரூபா முந்நூறு செலவு செய்து துணியும் தின்பண்டமும் வழங்கப்பட்டன.

சென்னையில் 20-1-32 முதல் 23-1-32 வரை ஸ்ரீமத் கருணானந்த சுவாமிகளால் நிலைபெறுத்திய வில்லிங்கடன் வாசகசாலையில் பல பெரியார் தலைமையின் கீழ் அறிஞர் பலரால் விரிவுரைகளும் கதாப்பிரசங்கமும் நிகழ்த்தப்பெற்றன.

மேலும் ஸ்ரீவைகுண்டத்தில் திரு. முதலியாரவர்களின் அறுபதாவது ஆண்டு நிறைவு விழா புரோகிதத்தில் நேரமும் பொருளும் மிக்குச் செலவின்றிச் சுருங்கிய முறையில் நடத்தப் பெற்றமையும் அதையொட்டிப் புதிய முறையில் அறங்கள் நடத்தப் பெற்றமையும் தமிழ் நாட்டு மக்கள் யாவராலும் பின்பற்றுதற்குரியனவா யிருக்கின்றன.

திரு. முதலியாரவர்கள் தொண்டைமண்டலத்தைச் சேர்ந்தவர்கள். இவர்கள் உண்மையும் உறுதியுமுடையவர்கள். வீண் செலவுக்கு ஒரு பைசாவும் வழங்கார்கள். பொதுநலத்தைத் தன்னலமாகப் பேணும் பெருஞ்சீலர். தமிழ்மொழியிலும் சைவசித்தாந்த சாத்திரத்திலும் ஆராய்ச்சி நிறைந்தவர்கள். உரையாடலில் பெருந் திறமை படைத்தவர்கள். வக்கீல் வேலையில் பெரும்புகழ் பெற்று இப்போது சில ஆண்டுகட்கு முன் அதினின்றும் விடுதி பெற்றுள்ளார்கள். நமது சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தில் மூன்று ஆண்டுகட்கு முன் ஒரு முறை டைரக்டராகச் சிலகாலம் இருந்து விலகி இப்போது மீண்டும் டைரக்டரா யிருந்து வருவது யாவரும் கேட்டு மகிழ்தற்குரியது.

இத்தகைய பெரியார் இவ்வுலகில் நீண்ட காலம் செம்மை நலத்துடன் உயிரோடிருந்து தமிழ் மக்கட்குப் பல்வகை யுதவி புரிய அருள் நல்குமாறு எல்லாம்வல்ல சிவபெருமானை உளமார வாழ்த்துகின்றோம்.

தென்னிந்திய சைவ சித்தாந்த சங்கத்தார்

---

# மதிப்புரை

கலைமகள்:—கலைமகள் என்ற புதிய மாத சஞ்சிகையின் முதலிரண்டு இதழ்கள் வரப்பெற்றோம். நல்ல கிளேஸ் காகிதத்தில் உயரிய முறையில் கண்ணைக் கவரத்தக்க விதமாய் அவைகள் அச்சிடப்பெற்றிருப்பது போற்றத் தகுந்ததே. அறிவியல், கலையியல், ஆராய்ச்சி, சிறுகதை முதலிய பல துறைகளிலும் எண்ணிறந்த கட்டுரைகள் அறிவிற்சிறந்த பல பெரியோர்களால் இவ்விதழ்களில் எழுதப்பட்டுள்ளன. தமிழுலகில் புத்துருவெடுத்துத் தோன்றிய கலைமகளை நாம் ஆர்வத்துடன் வரவேற்கிறோம். ஆண்டுக்கட்டணம் ரூ. 4. வேண்டுவோர், லா ஜர்னல் பிரஸ், மைலாப்பூர், சென்னை என்ற விலாசத்துக்கு எழுதவும்.



கதிர்காம முருகன் கோவில்